யம்புயதடங்குலவுகம்பைவளர்கந்தனுட
னம்புலீயாடவாவே. (௧0)

அம்புலிப்பருவ முற்றிற்று.

---

# சி ற் றி ற் ப ரு வ ம்.

பிறக்கும்வயிரச்சிலையடுப்பும்
பெருஞ்செம்மணித்தீக்கனல்விறகும்
பெட்பினுயாபொன்பாத்திரமும்
பெய்யுமுலைகறப்பனிநீரு
மிறக்கும்வெண்முத்தரிசியுமாய்
நீடுஞ்சிறுசோறட்டுமற்றை
நீலமணியாதியகறியாய்
நிலவவமைத்துவல்லிருளைத்
துறக்கும்பவளவிளக்கேற்றிச்
சுரிமென்குழலேமணல்வீட்டிற்
சுவாமிநினக்கேபடைத்திடுவேஞ்
சுரக்குங்கருணைபுரிந்தெமக்கே
சிறக்கும்விருந்தாய்வருஞ்சேயே
சிறியேஞ்சிற்றில்சிதையேலே
திருவார்கம்பாபுரிவேளே
சிறியேஞ்சிற்றில்சிதையேலே. (௧௧)

வேதத்தனிமாவடிமூலத்த
விமலச்சுடராவெண்மணலான்
விதியினமைத்தாகமப்படியே
விரும்பிக்கவுரிபூசைசெயும்
போதத்ததனையழிப்பதற்குப்
பொங்கியெழுமின்னகரன்னை
புரிந்துயாஞ்செய்மணல்வீட்டைப்
பொள்ளென்றழிக்கப்போதியென
வோதத்தடையின்மழவிடைபோ
லுற்றாய்கொல்லோவுளத்தாலு
முனக்குமுன்றாய்தனக்குமந்தோ
வொருபுன்பிழையுஞ்செய்தறியோஞ்
சீதத்தளிர்ச்செஞ்சிறடியாற்
சிறியேஞ்சிற்றில்சிதையேலே
திருவார்கம்பாபுரிவேளே
சிறியேஞ்சிற்றில்சிதையேலே. (எ௨)

உன்றாயுமையிவ்வுலகமெலா
மீந்தோர்சிற்றிலெனவயர
வுந்தைகணத்தினழிக்குமவ்வா
றொருநீமுறையிற்புகுந்தாயே
னன்றாய்க்குறவர்வளர்த்தகொடி
நாகர்வளர்த்தவிளம்பிடியு
நாடியிழைக்கும்வண்டன்மனை
யோடியழித்திகலில்வார்யா

ரின்றுயத்தோடியாமிழைத்த
வெழிலார்மனையையழிப்பதனுக்
கென்னமுறையோநிலைப்புனைந்திங்
கினிதுவிடுத்தவன்னையின்பாற்
சென்றுய்ந்தறிதியருட்குழந்தாய்
சிறியேஞ்சிற்றில்சிதையேலே
திருவார்கம்பாபுரிவேளே
சிறியேஞ்சிற்றில்சிதையேலே. (எங)

ஆசுபடியுமசுரமின்று
ரல்லெனினக்கேயகம்படிமைக்
கன்புபடியுமனமுடையே
மமைக்குமனைல்வீடழிப்பாயேற்
பாசுபடியுமிலக்காவிற்
பமரம்படியுமலர்க்கடம்பின்
பைந்தார்மணக்குந்திருமேனி
படியும்விசும்புமாசுபட
மாசுபடியுமைப்படியும்
வாட்கண்ணியுன்னுடைய
மாதாவறிந்தாலெப்படியோ
மற்றப்படியாம்படிப்பதென்னே
தேசுபடியுஞ்சிவப்படியாற்
சிறியேஞ்சிற்றில்சிதையேலே
திருவார்கம்பாபுரிவேளே
சிறியேஞ்சிற்றில்சிதையேலே. (எச)

ஒருத்திமணநாயகனுக
வொருத்திமணப்பெணுகவமைத்
துள்ளபலருமவரவருக்
குவந்தபடியேமுறையியற்றி
யருத்தியுடன்யாம்வண்டன்மண
மயரவிழைக்குஞ்சிறுவீட்டை
யழித்தலழகாவுலகேழு
மளித்தாளித்தவழகாநீ
யிருத்திமணநாயகனுக
யாங்கணினக்கேமணமுடிப்பே
மெல்லாச்சிறப்புஞ்செய்கின்றே
மெயினமடவாட்குரைக்கிலேந்
திருத்திமனையையலங்கரிப்பேஞ்
சிறியேஞ்சிற்றில்சிதையேலே
திருவார்கம்பாபுரிவேளே
சிறியேஞ்சிற்றில்சிதையேலே. (எ௫)

அற்பமுடையேமணல்வீட்டி
னமைக்கும்பவளவிளக்கவித்தே
யகல்கின்றனையென்புரிவோ
மனத்தமறைக்குமெட்டரியாய்
பற்பறிசையுங்காணுகின்ருய்
பாடலாடல்புரிகின்ருய்
பண்ணுக்குறம்பும்பண்ணுகின்ருய்
பார்வையுள்ளுறுமைழகின்ருய்

கற்பதருவேமலர்மருவே
கனியேகனியினறுஞ்சுவையே
கண்ணீராறுவுடையையெமைக்
கண்ணீராறுச்செயனன்றே
சிற்பகுமரகுருசரணஞ்
சிறியேஞ்சிற்றில்சிதையேலே
திருவார்கம்பாபுரிவேளே
சிறியேஞ்சிற்றில்சிதையேலே. (எசு)

சுரவாரணிமுன்மணந்திருப்பத்
தூயவமுதங்கிடைத்திருப்பத்
தொழுவோர்பலருஞ்சூழ்ந்திருப்பச்
சொல்லாதகன்றுதினைப்புனத்திற்
குரவாரணிமைக்குழற்குறத்தி
கொடுத்ததினைமாவுண்டுமதன்
கோபந்தணித்தியென்றுகரங்
கூப்பிமருவியொருவிமற்றே
ரிரவாரணியந்தனிடந்தவ்
வெயினமானைத்திருடினையென்
றிகழ்ந்ததுளதோவன்றியுமென்
னிழைத்தோம்பிழைத்தோமெனிழித்தி
திரவாரணிதன்சிறுகுமரா
சிறியேஞ்சிற்றில்சிதையேலே
திருவார்கம்பாபுரிவேளே
சிறியேஞ்சிற்றில்சிதையேலே. (எஎ)

காரார்மலக்காடறுத்தவர்தங்
கரணமொருப்பட்டினிதமரக்
கலின்செய்பனிருகரக்கன்றே
கன்னெஞ்சிற்றிலழித்தியெனிற்
போரார்சூருரழித்ததுவும்
பொன்னுடமராக்களித்ததுவும்
பொய்யாய்முடியுமையாநீ
புலவாபெருமானறியாயோ
நீரார்பெருக்கானிதநிதமு
நீண்மீன்வான்மீனெடுமோதி
நிழல்செய்மதியைத்தன்னிடத்தே
நிறுத்தமுயலும்விதமுகளுஞ்
சீராரயிராவதிகாடா
சிறியேஞ்சிற்றில்சிதையேலே
திருவார்கம்பாபுரிவேளே
சிறியேஞ்சிற்றில்சிதையேலே. (எஅ)

தறைசூழ்கலையின்வளைசிந்தா
சமனம்புரிந்துவளர்விந்தா
சலத்தையடக்கியுயர்சந்தா
சலத்தினமர்ந்தமுனிக்கிந்தா
வுறைதியெனத்தாளகந்தந்தா
யுனதுபெருமைக்கினிதுவந்தா
முளுற்றுமெமதுமனையுந்தா
வுதைக்கத்தகுமோவுரையெந்தாய்

மறையோன்றெழுஞ்சங்கரன்மைந்தா
மலைமானளித்தவுயர்சிந்தா
மணியேநெடுமோன்மகிழ்செந்தா
மரையாண்மருகாவானந்தா
சிறைதீரமரர்புகழ்கர்தா
சிறியேஞ்சிற்றில்சிதையேலே
திருவாரகம்பாபுரிவேளே
சிறியேஞ்சிற்றில்சிதையேலே. (எக)

வில்வச்சடையோன்வெள்ளிமலை
விளங்குமதன்பாற்கந்தமலை
மேருமலைமந்தரமலையவ்
விமயமலைவேங்கடமலைசெங்
கல்வத்தணிகைமலைவேடர்
களிப்பினமரும்வள்ளிமலை
கனஞ்சேர்மயிலைமலைமுதலாக்
கணக்கின்மலையுஞ்செழுநகரு
நல்வைப்பிடங்கடொறுநாளு
நயந்துநனிவீற்றிருந்தருணீ
நங்கள்சிறுவீடழிப்பதென்னே
நவிலும்படைவீடாறுவந்துஞ்
செல்வக்குமரகோட்டமமர்
சேயேசிற்றில்சிதையேலே
திருவார்கம்பாபுரிவேளே
சிறியேஞ்சிற்றில்சிதையேலே. (௨0)

சிற்றிற்பருவம் முற்றிற்று

---

# சிறுபறைப்பருவம்.

பெருநாடவிர்ந்திடா தான்றமெய்ப்புண்ணியம்
பெட்பினொடுசெய்யினுந்தாம்
பேணுமுடல்விட்டுத்தனிப்புகுந்தின்புறும்
பேறுதருபெருமைபெறுமைந்

தருநாடுபோலாதகூழ்ச்சுழவிகைக்குழவி
தனையர்மனைவியர்நட்பினோர்
தம்மொடுந்தங்களைப்பொங்கியொடுகொண்டுதிரி
சங்குகண்டாவல்சொள்ள

வருநாடொறுங்கலன்விமானத்தினேற்றியவ்
வாழிவாயொலிமுழங்க
வருவித்துவரிசைதந்தோங்குபொன்னுடென்ன
வளமிக்கவயிராவதித்

திருநாடவருள்கூடமகிழ்நீடவற்புதச்
சிறுபறைமுழக்கியருளே
செம்பொனகருக்கினியகம்பைநகருக்கிறைவ
சிறுபறைமுழக்கியருளே. (அக)

காவெலாம்பூவெலாம்வண்டெலாங்களுண்டு
கானஞ்செய்கனமுழக்குங்
கனியெலாங்கிளியெலாந்தின்றுநற்பேச்செலாங்
கழறிமகிழ்பெருமுழக்குக்

நீவெலாமணம்வீசுநளினமலர்தடமெலாஞ்
செறியும்வெள்வளைமுழக்குஞ்
செய்யெலாம்பயிரெலாஞ்செய்யுழவரேரோட்டு
சீர்பாட்டினிசைமுழக்கு
மாவெலாங்குடிகொண்டமனையெலாங்கல்யாண
வாழ்த்துவாச்சியமுழக்கும்
வாய்ந்தவயிராவதத்திருநாடவென்றன்பர்
வாயெலாந்துதிமுழக்குந்
தேவெலாம்புகழ்முழக்குஞ்செவியெலாங்கொண்டு
சிறுபறைமுழக்கியருளே
செம்பொனகருக்கினியகம்பைநகருக்கிறைவ
சிறுபறைமுழக்கியருளே. (௮௨)

நீர்பூத்தமகுடகோடீரதாண்டவமூர்த்தி
நீடமருகத்தினொலியு
நீணிறக்கொண்டல்வண்ணக்கண்ணன்மத்தள
கிரப்பொலியுநளினாசனத்
தேர்பூத்தநான்முகக்கிழவனொண்டாளத்தி
னெழுமொலியும்வீரவாண
னீராயிரங்கையிற்குடமுழமுழக்கொலியு
மிணையிலாப்பாணுகம்பன்
போர்பூத்தசங்கொலியுமிருவர்கல்யாழிற்
பிறங்கொலியுமேனையொலியும்
பிரணவாசாரியின்சிறுபறையினொலியிற்
பிறந்தபரமாணுவொலியேற்

சீர்பூத்தபேரொலிக்கவதியுண்டோமெலச்
சிறுபறைமுழக்கியருளே
செம்பொனகருக்கினியகம்பைநகருக்கிறைவ
சிறுபறைமுழக்கியருளே. (௮௩)

நந்தாதையம்பலத்தாடுமானந்தநட
னோக்காதுநோக்கிமகிழ்கூர்
நுண்ணிடைப்பெருமுலைப்பெருமாட்டிநஞ்சேய்
கொடிக்கும்பறைக்கிணங்க
வந்தாளெடுத்தாடவருமோநுமக்கென்ன
வன்பினுரையாடநகைசெய்
தாரியன்கல்விசடன்றெரிவனறிதியென
வரனுடைவயனுமாலுந்
தந்தாளமத்தளந்துமாறிநிற்கநீர்
சண்முகக்குருவையண்மித்
தான்கற்றுவருதிரெனவந்துனதருட்சந்நி
தானத்திணைத்துநின்றார்
செந்தாமரைச்சிறுகரங்கொடுபயப்பயச்
சிறுபறைமுழக்கியருளே
செம்பொனகருக்கினியகம்பைநகருக்கிறைவ
சிறுபறைமுழக்கியருளே. (௮௪)

அத்தனீயெமதருமையன்னைநீதெய்வநீ
யாபத்தகற்றியன்பா
யாதரிக்குங்கருணைவள்ளனீமாரனீ
யாண்மையுளவிசயனீயென்

றெத்தனை விதஞ்சொலியுலோபரைத் தண்டமி
ழியற்றினுமிரக்கஞ்செயா
ரிலக்கண விலக்கியக்கற்பனைக்கவியா
லிறைஞ்சியெனையேத்தவேண்டாம்
பித்தனெனுநீலியும்பெறுதகப்பன்சாமி
பெருவயிற்றன்றம்பியப்
பேய்ச்சிமுலையுண்டகள்வன்மருகன்வேடுவப்
பெண் மணவனென்றேசினுஞ்
சித்தமகிழருள்செய்துமென்றேமுழக்கல்போற்
சிறுபறைமுழக்கியருளே
செம்பொனகருக்கினியகம்பைநகருக்கிறைவ
சிறுபறைமுழக்கியருளே.　　　　(அ௫)

வேறு.

போதிலயன்சமவேதியர்நீதி
பொருந்துநல்வேந்தர்பெரும்
புண்ணியம்வளரப்பொருள்வளர்வாணிபர்
பூமிதிருத்துபுவெண்
மாதிரமகிழ்வுறநெற்பயிர்முதல
வளர்ப்பவரேனையரு
மன்னிவளர்ந்திடுசீரயிராவதி
வளநாடுடையரசே
வாதிலெதிர்ந்திடுமைம்புலவேடரை
வாட்டுமெய்ஞ்ஞானமெனும்
வாளுடையோகியர்காதின்மடுக்குறும்
வண்டசநாதமெனக்

கோதில்குணாகரசோதிதயாபர
கொட்டுகசிறுபறையே
கோபுரமுயர்கம்பாபுரகுமரன்
கொட்டுகசிறுபறையே. (அ௬)

பஞ்சரவஞ்சுகனாடொறுமன்பர்கள்
பாடுதிருப்புகழைப்
பழகியவண்ணம்பாடவதற்குப்
பமரமதிசைகூட்ட
வஞ்சரளப்பொழிலமர்முகின்முழவ
மதிர்த்திடமயிலாட
வழகிதழித்தலையசையாப்பொன்சொரி
யயிராவதிநாடா
வெஞ்சரவுணரைவென்றொருகுஞ்சர
மெல்லியணைம்கொடுபோய்
மிக்குளவந்தரதுர்துபிவிமலியல்
விண்ணகர்வீதியின்வெண்
குஞ்சரமிவருங்கடயுட்கோளரி
கொட்டுகசிறுபறையே
கோபுரமுயர்கம்பாபுரகுமரன்
கொட்டுகசிறுபறையே. (அஎ)

மண்டலநரமங்கையர்சீரெங்களை
மானுவிரோவென்று
வான்மடவார்சொலவானரமங்கயிர்
மற்றுமையொப்பலமென்

றண்டமடந்தையர்காணுறநகைசெய்
தரிவையரமரசிவந்
தரமியமாடம்பொன்னாட்டியருந
லயிராவதிநாடா
'ண்டருகிளவியுழத்திகண்மோகப்
பள்ளர்கள்பண்ணைதொறும்
பன்மலையொப்பிடநென்மலைகுவியப்
பயிரிடமழைபொழியக்
கொண்டன்முழக்கெனமயில்கணடிக்கக்
கொட்டுகசிறுபறையே
கோபுரமுயாகம்பாபுரகுமரன்
கொட்டுகசிறுபறையே. (அ)

வானேவெளியேகனலேபுனலே
மண்ணேவளைகடலே
மலையேபொழிலேதருவேமலரே
மதுவேபரிமளமே
ஊனேயூனினதுடலேயுடலின
துயிரேயுயிருணர்வே
யுணர்வுக்கொளியேயொளியினுளொளியே
யோங்கியபூரணமே
தானேதானாய்வளர்தரும்வாழ்வே
சத்தேசிற்சுகமே
சட்சமயங்களுமற்புறுமற்புத
சண்முகவருள்வடிவக்

கோனே நின்னுருவுலகதிராமே
கொட்டுகசிறுபறையே
கோபுரமுயர்கம்பாபுரகுமரன்
கொட்டுகசிறுபறையே. (அகூ)

## வேறு.

செண்டார் மூலையமுதுண்டார் செறுமுமை
செங்கரமலாமருவே
சிந்தாமணிநிதியைர் தாருவுநினை
திப்பியசுரதருவே
கண்டாதரவொடுதொண்டாயமர்நெறி
கற்றவரடைதிருவே
கஞ்சாதனவிதிமஞ்சாநிறவரி
கட்கொளிதருகருவே
திண்டானவரெனும்விண்டார்கெடவரு
செற்றமதுளவுருவே
செஞ்சேவடிகொடுசெஞ்சேமெனமடி
சிற்பரசிவகுருவே
கொண்டாடுநர்மகிழ்தண்டாயுதகர
கொட்டுகசிறுபறையே
கும்பாய்நலனிறைகம்பாபுரகுக
கொட்டுகசிறுபறையே. (கூ0)

சிறுபறைப்பருவ முற்றிற்று.

---

# சிறுதேர்ப்பருவம்.

எட்டிக்குமொளிவீசும்வச்சிரச்சகடச்ச
மெழிலீலகோமேதகத்
திலகுபாரதட்டுவெயிரேயப்போதிகை
யிசைந்தபவளக்கால்களுந்

திட்டிக்குவிந்தையாம்பச்சைக்கொடிங்கையுந்
திகழ்புட்பராகமொட்டும்
செம்மணிக்கலசமுந்தரளவெண்கவிகையுஞ்
செய்யபொற்கொடிசமைத்தே

சிட்டிக்குமயனுங்குமரிதானபெரிதான
சித்திரமெலாங்குயிற்றிச்
சேவலங்கொடியுயாத்தையஙின்பொன்னிரத
சேவைகண்டார்வினைவிடுார்

செட்டிக்குமாரனுக்கழகெனப்புகழுநீள்
சிறுதேருருட்டியருளே
செகராசர்புகழ்கம்பைநகர்வாசமகிழெழுந்தை
சிறுதேருருட்டியருளே. (கக)

மாரதிமணாளனுக்கைம்படையளித்தகா
மாட்சியென்மகவுசிறுதேர்
மானுதேரில்லையெனவேகம்பனெனதுதேர்
மானுமெனவஃதிவன்சூழ்

பாரதிற்பூட்டாழியிளவலாற்பயநீங்கு
பானுவாம்பரியென்னிலோ
பகர்பொருட்கிடனுயவுமைமொழியைத்தாங்கு
பூரசுருதியேநடத்துஞ்
சாரதியிவன்கையிற்குட்டுண்டகதையையான்
சாற்றவேண்டுவதோவெனக்
சங்கரனைக்கலூர்நகைசெய்யுநிற்கிது
தகுந்ததெனவுமையைநோக்கிச்
சீரதிசநின்மகன்றேரொன்று பரமன்மகிழ்
சிறுதேருருட்டியருளே
செகராசர்புகழ்கம்பைநகர்வாசமகிழெழந்தை
சிறுதேருருட்டியருளே. (௧௨)

ஐயநீசிறுதேரையிம்மெனவுருட்டினு
லவனிமானதிருமுடையா
மலைகடலதிர்ந்துமேற்பொங்குமவள்கொங்கையா
மசலங்களதிருமவடன்
றய்யமண்டபமானவாகாயமதிருந்
துளங்காததீபமான
சூரியனதிர்ந்திடுந்தகழியாமவனெடுஞ்
சோதியந்தேரதிருமே
லொய்யெனத்தனியாழியெழுபுரவியரவுகயி
றொழியுநிலைவிட்டகன்றே
யோடினிலைசெய்யமுடவலவனென்செய்வன்மன
மோயுநீயறியாததோ

செய்யவண்டாமரைக்கைய துவருந்தாது
சிறுதேருருட்டியருளே
செகராசர்புகழ்கம்பைநகர்வாசமகிழெந்தை
சிறுதேருருட்டியருளே. (கூகூ)

மருவார்சடைப்பிரான்கயிலாசகிரியென்ன
மாதிமயசயிலமென்ன
மாலாலெனக்கமலவல்லிபாற்கடலென்ன
மலரயன்வேதமென்னத்
தருவாணிசங்கமெனவிந்திரன்வண்பரஞ்
சயிலமெனவிந்திராணி
தன்கற்பதருவென்னமாரனென்கணையெனத்
தக்கரதியின்புருவென
வொருவாதமுனிவர்மகவேதியெனவவர்மாத
ரொண்மணித்தீபமென்ன
வுயர்தெய்வயானைவெள்ளானையெனவள்ளிமா
னுளிர்புனத்திதணமென்னத்
திருவாளரமதுபெருவாழ்வென்னவொளிருநின்
சிறுதேருருட்டியருளே
செகராசர்புகழ்கம்பைநகர்வாசமகிழெந்தை
சிறுதேருருட்டியருளே. (கூ௰)

குண்டுகண்வெண்பற்றிரங்குகொங்கைப்பெருங்
குழிவயிற்றுப்பேயழுங்
குட்டியலகையையுதிரவாற்றூட்டிவெம்பிணக்
குன்றுதனத்திருத்தித்

துண்டுபடுதலைகளைக்குடராற்றொடுத்தினிது
சூட்டியவுணர்களுடம்பிற்
றுன்னமுக்காற்றிலகமிட்டுவீழ்கேடகச்
சோரிநீர்த்திட்டிசுற்றி
மண்டுபசிநீங்கவிணவமுதூட்டியென்செல்வ
மகவுகண்வளர்கவென்று
வள்ளனின்புகழ்பாடமார்க்களத்திற்றவர்கள்
வரவமுதமலைதந்தசூர்
திண்டுவசரதிற்கரோக்குசித்தச்சாமி
சிறுதேருருட்டியருளே
செகராசர்புகழ்கம்பைநகர்வாசமலிமெழுந்தை
சிறுதேருருட்டியருளே. (கூரு)

எங்கண்முகமலரவருமிறைவகாத்தருள்கவென
விந்திரன்கவரிசாய்ப்ப
விமயோர்களாலவட்டம்வீசமதிகதிர்க
ளெழில்செய்வெண்கவிகைதாங்க
வங்கமுகலசுராருயிர்றுங்குமக்தகனன்பி
னருகினுடைவாள்பிடிக்க
வளைகைவாழ்தனபதியடைப்பையேந்திடவருண
ஞர்ந்துபடியகமெடுக்கத்
துங்கமுகமன்சொல்லிமாலயனுமருகுறச்
சோதிதருதேரூர்ந்துபோய்ச்
சடருதயமலைமீதமுதரமாமலையினுக்
துன்னூதரைமீட்டுவன்

சிங்கமுகனைச்செற்றசண்முகச்சரபமே
சிறுதேருருட்டியருளே
செகராசர்புகழ்கம்பைநகர்வாசமகிழெந்தை
சிறுதேருருட்டியருளே. (கசு)

நாவேழுகொண்டகனலாண்டலைக்கொடியாக
நம்மருந்துய்க்குமுயர்தேர்
நம்பர்தரவூர்ந்திரண்டாயிரவெளம்பூதர்
நவவீராதுணைவரொடுபோய்
மேவேழுகடலெட்டுமலையொன்பதொண்டுகண்ட
மிளிர்பதிற்றுசையுலக
மேலேழுகீழேழுபுவனண்டமுற்றுமமர்
விளையாடிவடிவுகாட்டி
மூவேழுபதினாயிரஞ்சிங்கமாளிபேய்
மூட்டுதோச்சூரபன்மன்
முனையோய்ந்துமாவாகவேலினிருகூறுக்கி
மூள்சேவன்மயிலாய்வரத்
தேவேழுமாரதன்போற்றவேற்றூர்ந்தவேள்
சிறுதேருருட்டியருளே
செகராசர்புகழ்கம்பைநகர்வாசமகிழெந்தை
சிறுதேருருட்டியருளே. (கஎ)

தக்கைதநண்புலகுபேரன்றனையவண்புறத்
தந்தபுட்பகவிரதமோ
தான்பிழைசெயிற்சிறைசெயாதருள்கெழுவிறு
சமைத்துதவுபிரமரதமோ

விந்தையாய்மருகன்விளையாடலுக்கிந்திரன்
விடுத்தவொருதெய்வாரதமோ
விந்தைமெய்த்தவமிழைத்தறுமுகற்கிந்நினிமை
மேவுநல்விநோதரதமோ
விந்துசேகரன்விலாய்வளையாதபடிமேரு
வெண்ணியமைகனகரதமோ
வென்னென்றுசொல்லுகேமென்றுநின்றிமையோர்க
ளேத்திநோக்கிக்களிக்கச்
சிந்தைமலர்திருவாணையுலகெலாஞ்செய்யுமா
சிறுதேருருட்டியருளே
செகராசர்புகழ்கம்பைநகர்வாசமகிழெந்தை
சிறுதேருருட்டியருளே. (௧௮)

தித்திக்குமானந்தவெள்ளமேகோதிலாச்
செங்கரும்பேசீனியே
திகழ்தரும்பாற்கட்டியேகனிச்சுவையே
தெவிட்டாதவானமுதமே
பத்திக்குவந்தபதியேகருணைநிதியமே
பரிபுரணசாந்தமதியே
பரமவேகம்பர்காமாட்சிமகிழ்செல்வமே
பாவாணர்துதிவள்ளலே
முத்திக்குவித்தேயருத்தவர்தமக்குமெய்ம்
மூலமேதேவசேனை
மூர்த்தியேகுஞ்சரிகுலாவுமலையேவள்ளி
மோககற்பகதாருவே

சித்திக்குமன்பர் குலதெய்வமாணிக்கமே
சிறுதேருருட்டியருளே
செகராசர்புகழ்கம்பைநகர்வாசமகிழெந்தை
சிறுதேருருட்டியருளே. (௯௯)

அருள்சுரக்குஞ்சோமகிரணமுககமலமு
மபாங்கநயனவிலாசமு
மணிமுத்துவண்சுட்டியசைசெற்றியிற்பொட்டொ
டற்புதப்பொற்பட்டமும்
பொருள்சுரக்குஞ்சுருதிமணமிக்ககுமுதவாயிப்
பொலியுமென்மூரனிலவும்
பொற்புநவரத்தினக்குண்டலக்கன்னமும்
புயகனகமேருகிரியும்
மருள்சுரக்குங்கடியமலநீக்குமொளிவீசு
மாணிக்கமாலைமார்பும்
மனவுகின்கிணிபொன்னினரைஞாணுமெய்ஞ்ஞான
வடிவானசீபாதமுந்
தெருள்சுரக்குங்காட்சிதெரிசிக்கவருண்முருக
சிறுதேருருட்டியருளே
செகராசர்புகழ்கம்பைநகர்வாசமகிழெந்தை
சிறுதேருருட்டியருளே. (௧00)

சிறுதேர்ப்பருவமுற்றிற்று.

**கம்பைமாநகர்பிள்ளைத்தமிழ் முற்றிற்று.**

---

சிவமயம்.

கம்பைச் சந்நிதிமுறை.

முருகர்

# அலங்காரம்.

## காப்பு.

கட்டளைக்கலித்துறை.

மாவலங்காரமலர்ப்பொழில்சூழ்கம்பைமாநகர்வாழ்
தேவலங்காரசிகாமணிசண்முகதேசிகன்மேற்
பாவலங்காரமலங்காரமாகப்பகர்ந்தணியக்
காவலங்காரகடவிகடாசலக்கற்பகமே.

## நூல்.

பூங்கற்பகநிழல்வண்டாமரைநற்புணரியென்னு
மோங்கற்பகமொருமூன்றையுமன்பர்க்குவக்துநல்கி
யீங்கற்பகனுமெழிற்கம்பைவாழ்குகனெங்கள்பிதா
வாங்கற்பகத்தெய்வயானையுய்வள்ளியுமன்னையரே. (க)

கந்தாகுமராகவுரிசுதாமணிகண்டர்பெற்ற
மைந்தாகுவலயமாணிடர்மாதவர்வானவர்தஞ்
சிந்தாகுலமறவந்தெழிற்கம்பைத்திருநகர்வா
ழெந்தாய்குணக்குன்றமேநம்பினேனுன்னிணையடியே. ()

கீர்த்திகையாயசரவணைதன்னிற்செனித்தருளிக்
கார்த்திகைபாலுண்டாற்குபதேசங்கழறியந்த
மூர்த்திகைவேல்கொண்டசூரனைவென்றமுருகனைகர்
பார்த்திகையெட்டும்வந்தேத்திக்கைகூப்புங்கம்பாபுரமே.

வேதாசரணம்புகுந்தேத்துங்கம்பையுண்மேயகுரு
நாதாசரணங்குமாராசரணநளினமலர்ப்
பாதாசரணம்வைவேலாசரணம்பரமவருட்
டாதாசரணங்குகேசாசரணஞ்சரணுனக்கே. (௪)

ஓங்காரமெய்ப்பொருளைப்பரமேசற்குரைத்தவுண்மை
யீங்காரறிகுவர்சேயேனறிகுவதெப்படியோ
பாங்காரவண்கம்பைவாழ்பரமாரியபாசவினை
யாங்காரவல்வினைநீங்குமெய்ஞ்ஞானமருளுகவே. (ரு)

எத்தனை யெத்தனை யன்பர்வந்தாலு மினிமையொடு
மத்தனை யத்தனை யன்பாக்குங் காட்சியருளுங் கம்பை,
முத்தனை முத்தனை யம்மூரல் வள்ளிமின் மோகனைச்சே,
ரித்தனை யித்தனை வேண்டுகொ லோவென்ற னேழை
நெஞ்சே. (சு)

வேலுண்டுவெற்றிமயிலுண்டுசேவல்விலோதனமு
மேலுண்டுபெயநற்றுயருண்டன்பர்மிகவுமுண்டு
பாலுண்டுமைந்தர்விளையாடுங்கம்பைப்பதிகுகன்பூங்
காலுண்டுகண்டுகொண்டார்க்கருளுண்டிவைகட்டுரையே.

பேயோடுறவுகொண்டாடியபித்தப்பெயர்தெரிக்கப்
போயோடுகொண்டிரந்தாரூர்வெம்பசிபோக்குமரன்

சேயோடுவந்திடிற்றீங்கில்லையென்றனைத்தேர்ந்தடைந்
ரேயோடுவமைகொள்கம்பாபுரியுறைசண்முகனே. [தேன்

ஈகையுந்தூய்மையும்வாய்மையுஞ்சாந்தமுமின்புமன்பு
மோகையும்புத்தியுஞ்சித்தியுமுத்தியுமூக்கருளாய்
பாகையும்வெல்லுமொழியார்பயில்கம்பைப்பண்ணவநின்
றோகையுஞ்வேலும்பதாகையுந்தோத்திரஞ்சொல்லுவனே.

முன்னையும் பின்னையு மேதொன்றுந் தேராத மூடனிவ
ன், றன்னையு மாதரிக் கத்தகு மோவெனச் சற்றுமெண்
ணுன், றென்னையும் வாழையு மோங்குகம்ப பாபுரிச் சேந்
தன்வந்தே, யென்னையுந் தொண்டுகொண் டானென்னை
யோவவ னின்னருளே. (க0)

மாலுமயனுஞ்சுரேசனுந்தேவருமாதவரு
நாலுமறையும்புகழ்கம்பைவாழ்கந்தநாயகன்பூங்
காலுமணமுங்கலக்கநின்றூர்தமைக்காணுநின்வாய்
வேலுமயிலுமென்றேபலகாலும்விளம்புநரே. (கக)

தாயிரங்காவிடிற்சேயென்னசெய்யுமத்தன்மையைப்போ
னீயிரங்காவிடில்யானென்னசெய்வனியமமுட
ஞயிரங்காவடிகொண்டன்பர்சூழ்கம்பையண்ணலெனைக்
கூயிரங்காயடியேனுன்னடைக்கலங்கூடினனே. (கஉ)

மாமகவண்புகையேமழையாகவழங்குகம்பைக்
கோமகள்பாலகன்சற்குருநாதன்குளிர்மலர்த்தா
டாமகம்வைத்திடுமெய்யன்பரெவ்விடைச்சார்ந்திடினும்
பூமகளுமகணீங்காதவரைப்பொருந்துவரே. (கங)

சரவாரணியைப்பரங்குன்றில்வேட்டுச்சுகம்பெற்றநீ
யிரவாரணியத்தொருகுறமானையிசைந்ததென்னோ
கரவாரணிவளர்கம்பைக்குகேசகலைமதியோ
டரவாரணிசடையப்பன்செயனின்னருஞ்செயலே. (௧௪)

மழவடி வங்கண்டு தேவேந்தி ரன்றந்த மாதிருந்தங், கிழவடி வங்கொண்டு வள்ளியைச் சேர்ந்தவொர் கேண் மையைப்போன், முழவடி யோசை பதினா லுலகு முழங் குங்கம்பைப், பழவடித் தொண்டருட் புத்தடி யேனையும் பார்குகனே. (௧௫)

செம்பாதிகொண்டுசிவனோடுகூடிச்செகமளித்த
வம்பாதிருமகன்வள்ளிக்குநாயகனாறுமுகன்
கம்பாதிபன்சுபன்வைபவன்கந்தன்கமலபத
நம்பார்திருப்பவர்க்கேதுண்டுகோணிந்தநானிலத்தே. (௧௬)

பெரும்பேதை யென்மனா வொன்றுண்டு கேட்டியென் பேசிடினார், திரும்பே னெனவென்றன் பாழான நெஞ்சந் திரிவதுட, னிரும்பேசிகர விருப்பதற் கென்செய்வ னீராறு கட், கரும்பே கம்பாபுரி வாழ்வே சிறிது கடைக்கணியே.

கடையானநாளிற்கடாமிசையேறிவன்காலன்வந்து
படையான்மருட்டிவெம்பாசத்திற்கட்டிப்படுநரகிற்
றடையாதுமின்றியிடுவேளையாகுகன்றாசனென்றா
லடையான்விடையுடையான்மகனேகம்பையாண்டவனே,

ஆரணமோதியெனாகமந்தேர்ந்துமெனம்புவியுட்
பூரணவாயுள்படைத்துமென்கீர்த்திபொருந்தியுமென்

ஞோணவீதியலங்காரக்கம்பையுட்சோதிகுக
ஞரணன்றன்மருகன்முருகன்பதநாடலரோ. (கக)

குணக்கே யுதித்திட்ட சூரியன் சென்று குடகடல்வீழ்,
கணக்கேயித் தேகம் வருவதும் போவதுங் கண்டிருந்து,
முணக்கேட் பவர்க்கன்ன மீயா வுலோபர்க்கு முய்வுமுண்
டோ, மணக்கே தகையல்லி வாய்ச்சோறு பெய்கம்பை
வாழ்குகனே. (உ0)

மாயக்கிரவுஞ்சவெற்பைப்பிளர்தண்டவாணர்தம்மைக்
காயக்கிரமஞ்செய்வன்றாரகனைக்கடந்தவைவேற்
றாயக்கிருபாகரகம்பைவாழ்கந்தசோதியுன்றன்
சேயக்கிரணச்சரணாரவிந்தமென்சென்னிவையே. (உக)

ஆதாரமாறுங்கடந்தப்புறத்தேயமர்ந்தவொன்றே
போதாரணன்றனைக்குட்டிச்சிறையிற்புகுத்தகுன்றே
காதாரவீசற்குபதேசஞ்செய்தகளபக்கன்றே
மாதாரணிபுகழ்கம்பையுண்மேயநின்வண்மைநன்றே. ()

பித்துத்தலைகொண்டுசானகியைச்சிறைபெய்தவஞ்சன்
பத்துத்தலையும்பனங்குலைபோலப்பறித்தமரிற்
செத்துத்தலைமையிழந்திடச்செற்றவன்சீர்மருகன்
வித்துத்தலைமழையாங்கம்பையம்பதிமேவுநர்க்கே. (உங)

தண்ணியநந்தவனஞ்சூழ்கம்பாபுரிச்சண்முகனூர்
நண்ணியணந்தனடைகற்கும்வண்ணநடக்கும்வள்ளி
யெண்ணியணந்தம்பிழைசெய்தவனிவனென்றிடினும்
புண்ணியசந்தமன்பன்புரிந்தானெனப்போற்றுவரோ. ()

சேலுமயிலுநிகர்விழியார்புகழ்தீங்கனியும்
பாலுமயிலுஞ்சுவையாய்வினைத்திவண்பைம்பொழில்வா
யாலுமயிலுக்களிபாடுங்கம்பையமர்முருகன்
வேலுமயிலும்விடமாய்வினைத்தியென்வெள்ளறிவே. ()

வயிராக்கியத்தொடுகாட்டினெருப்பின்மலைக்குகையி
னுயிராவணமுற்றுயோகுசெய்வார்க்குமொளித்தகள்வன்
பயிராம்வயலுக்குத்தேன்பாயுஞ்சோலைபலன்றருஞ்சி
ரயிராவதிநதிசூழ்கம்பையின்வெளியாயினனே. (உசு)

வெம்பாதகஞ்செய்தவஞ்சகராயினும்வேலவனை
யம்பாசுதனையறுமாமுகனையடியவாக்குச்
செம்பாதமல்குஞ்சிவகுருநாதனைச்சிந்தைசெய்தே
கம்பாபுரியையமித்தவரோமுத்திகண்டவரோ. (உஎ)

அம்பாருலகிலறமேவளர்க்குமவரெனினும்
வெம்பாவஞ்செய்யுமவுணக்கடல்வற்றவேல்விடுத்த
கும்பாரியாக்கொருஞானசிரியக்குகனையுன்னிக்
கம்பாபுரியையடையாதவர்கொடுங்கண்மிகளே. (உஅ)

வானுடரிப்பெருமண்ணுடாமற்றையர்வாழ்த்துங்கம்பை
ஞானகரகுருநாதகுகேசநின்னுண்மலர்த்தா
டானுதரவெனநம்பிவந்தேற்குத்தயைசெய்திலா
யானுலுமென்வினைக்குன்னைவெறுப்பதழகல்லவே. (உகூ)

பேறுமுகத்தினைவேண்டினுமல்லதுபேருலகில்
வீறுமுகத்தொடுபோகத்தைவேண்டினுமெய்த்துதியே

கூறுமுகத்தடனெண்ணுககம்பைக்குகேசனுரு
ளாறுமுகன்றிருமந்திரமாகியவாறெழுத்தே. (நூ0)

கரித்திரளாலழிவுற்றிபிந்திங்கன்னர்காடெனவே
பரித்திரவும்பகலும்வினையிற்படும்பாடுரைக்கின்
விரித்திரண்டாயிரநாவுடையானும்விளம்பருமோர்
சரித்திரமாகுமையாகம்பைமேவியசண்முகனே. (நூக)

நல்வேன் மயிலென்று நாடொறு மன்புட ஞைத்தடிக்கச், சொல்வேன் திருக்கம்பை வாழ்குக வித்திடங் கொண்ட வென்னைக், கொல்வே னெனவரச் சண்டனுக் கிங்ஙனங் கூடுங்கொலோ, வெல்வேனவனைக் கடாவும் படாளும் வெருண்டிடவே. (நூஉ)

வாய்க்கும் பெருஞ்செல்வக் கம்பா புரியில் வளர்குகனை ப், போய்க்கும் பிடுகின்ற மெய்யடி யார்களிப் பூதலத்து, ஞெய்க்கும் பசிக்கும் விடத்துக்குங் கள்ளர்க்கு நுந்தழற் கும், பேய்க்கும்பின் னோதுக்கு மஞ்சா ரறிந்துகொள் பேதைநெஞ்சே. (நூநூ)

ஆசாரவீனனடக்கஞ்சிறிதிலனன்புமிலன்
காசாரவெங்கு ந்திரிபவனென்றெனைக்கைவிடலோ
பூசாரமிக்குளகம்பாபுரியுறைபுண்ணியனே
வேசாரனீக்கியருள்புரிவாரிங்குவேறில்லையே. (நூச)

கோலாலெழுகடலெய்தான்மருகன்குகன்கம்பைவேள்
வேலாலெழுகடல்வற்றவிடுத்தல்வியப்பன்றன்னை

பாலாலெழுகடலுண் டேனையன்பினிற்பார்த்தவன்பூங்
காலாலெழுகடல்வற்றச்செய்தானிதுகாண்வியப்பே. ()

இன்டக்கணீரபிடேகநற்சாந்தமினியசந்த
மன்பர்ச்சித்தேத்துமலர்பசுபோதமமுதமென்றே
நன்பத்திமான்கணினைக்கலப்பார்கம்பைநாயகனே
துன்பத்தினேனுனையெவ்வாறடைவதுசொல்லுகவே. ()

காலையுமாலையுமாலயஞ்சென்றுகசிந்துபசும்
பாலையுமாலையுங்கொண்டாட்டிச்சூட்டிப்பணிந்துகன்னற்
சோலையுமாலையுஞ்சூழ்கம்பைவேலற்குத்தொண்டுபட்டா
மேலையுமாலையுநீர்ந்துய்யலாமிதுமெய்ம்மொழியே. [ன்

அத்தனைவேலணியத்தனைத்தோகைவையத்தனைமெய்ச்
சத்தனைக்கோழித்துசத்தனைப்பத்திவசத்தனைச்சீர்க்
கத்தனையன்பரகத்தனைக்கம்பையகத்தனைமா
சித்தனைமுன்னருச்சித்தனையோநரிசித்தனையே. (௯௮)

தேருங்கடகரியும்பரிமாவுஞ்செறிமறுகிற்
ளுருங்கடகமுஞ்சாந்தமுங்குப்பைசெய்தண்கம்பையா
மூருங்கடவுணின்பேருங்கருதியுளாப்பவர்க்குச்
சாருங்கடலன்னசெல்வமுண்டாமிதுசத்தியமே. (௯௯)

இருள்வா ரிருங்குழன் மாதர்கள் கட்கய லேன்றுகன்னத், தெருள்வாரி யாடக்கண் டாடவ ராடித் திளைப்பதுடன், பொருள்வாரி யேழைகள் பாற்பொழி கம்பையுட் புண்ணியனின், னருள்வாரி யாடுவ தெக்காளிந் நானென் றருளுகவே. (௱)

காமன்கொடிக்கயல்போற்றடமீனுகள்கம்பையின்க
ணீமன்னுதன்மையிற்சேயேன்மனத்துநிதமுறைவாட்
பூமன்படைப்பதும்போர்ப்பகர்ந்துபுகுந்துபொல்லா
வேமன்பிடிப்பதுமாகியதீமையெனக்கில்லையே. (௪௧)

முன்பதுமாதனத்தச்சனெனதுமுயல்பொருள்கொண்
டென்பதுவேமுதலோரெழுதாதவினையைந்தவண்ண
மொன்பதுவாயின்மனைசெய்தளித்தனனுள்ளிருப்பேன்
பின்பதுவீழுமுன்கம்பைக்குசாகல்பெட்டேறகவே. (௪௨)

புலியாரவீழ்ந்துபணிபவருன்றன்புகழ்முழுதுஞ்
செவியாரக்கேட்பவர்கண்டுதரிசனஞ்செய்பவர்நற்
கவியாரச்சொல்பவர்கம்பைக்குகேசகடனிலத்துற்
பவியாரத்துயாபதத்தாள்பட்டாலும்பவமில்லையே. (௪௩)

அன்பேநிறைந்தவென்னுருயிரேயறிவேயமைந்த
வின்பேமனுதிகடந்தவொன்றேசொல்லிரண்டறவே
கன்பேறளிக்குந்தயாநிதியேகம்பைநாயகனே
நின்பேரிலோர்பெயரேயருள்கூட்டுநினைப்பவர்க்கே. ()

ஓராழித்தேரவன்றிக்குப்பிழைக்கவுரகமஞ்ச
நீராழிபொங்கக்குலகிரியோரெட்டுநீறுபடப்
போராழித்தானவர்நெஞ்சங்கலங்கப்புலவருய்யப்
பாராழிவட்டமிடுங்கம்பைவேலன்பரிமயிலே. (௪௫)

ஒன்றுவிரண்டாவொருகோடித்துன்பமொருங்குபற்றி
நின்றுலென்செய்வதுமன்றுடிநின்னிடஞ்செப்பவந்தே

னன்றாய்மறித்தைவர்நின்றார்திருக்கம்பைநன்னகர்வா
ழென்றாய்முருகையனேதுய்யனேயெனையேன்றுகொளே

கருவினையாடல்புரிந்தன்னைநோவிக்காசினிமேற்
றெருவினையாடலுந்தீவினையாடலுஞ்செய்யுமென்றன்
பெருவினையாடற்குங்கம்பைப்பிரானின்பெருங்கருணைத்
திருவினையாடற்குமொப்பில்லைதப்பில்லைசெட்பிடினே. ()

ஊக்கமதுகைவிடேலெனனுநீதியுணர்கில்லா
தேக்கமதுகொண்டுனைமறந்தேன்சினையின்மிசையி
னோக்கமதுவிசாராயேனையன்புடனோக்கியரு
ளாக்கமதுநிறைகம்பாபுரியுறையாண்டவனே. (௪௮)

பாலனாயுதசிவன்பாதத்திற்கண்ணைப்பறித்தணிந்த
மாலாயுதமொன்றைமாலையிற்சூடியவஞ்சகனை
வேலாயுதங்கொண்டுவென்றபிரான்கம்பைமேய[illegible]கன்
காலாயுதனுவசையாயுதவுவன்கான்மலரோ. (௪௯)

பூப்பிட்டுச்சங்காரதற்பரவேதபுராணவென்றே
கூப்பிட்டுக்கூப்பிட்டுமாறேடவஞ்சித்துக்கூடல்வந்தி
மாப்பிட்டுக்காளனவந்தான்றருங்கம்பைமைந்தனையுட்
காப்பிட்டுயாப்பிட்டுணைத்தந்ததக்காரணநன்றே. (௫௰)

மாகாத்திரகணநாதருந்தேவருமாதவரும்
வாகாத்திரள்கம்பைவள்ளால்பரதமயிலின்மிசை
மோகாத்திரவள்ளிகுஞ்சரியோடென்றன்முன்னணைந்து
நீகாத்திரவும்பகலுமென்னெஞ்சினிலாவுகவே. (௫௧)

வருமந்தி நேரத் தரங்கிடை மத்தள மாமுழக்கைக்,
கருமந்தி கண்மழை யென்றுவிண் பார்க்கும்வண் கம்பை
யிடைத், தருமந் திகழ வளர்முரு காநின் சடக்கரமாந்,
திருமந் திரமுப தேசித்தென் றீவினை தீர்த்தருளே. ()

கண்பொடி ராவும்பகலுஞ்சகலருநண்ணிநண்ணிக்
கண்பொடியாமற்றரிசிக்குங்கம்பைக்கடம்பநின்கை
வெண்பொடிதாராவிடினுநின்காற்பட்டுவீழுமொரு
நுண்பொடியிற்பொடியேனும்படும்படிநோக்குகவே. ()

ஐயாயிரஞ்சொல்லியாவதென்னன்பில்லையஞ்சலிக்கக்
கையாயிரமில்லைகண்ணுயிரமில்லைகாணவிழ
மெய்யாயிரமில்லைவாயாயிரமில்லைவிண்ணட்பிக்க
மையாயிரங்கொண்டசேடன்புகழ்கம்பைப்பண்ணவனே.

மண்ணுளவெண்ணுவர்வானுளவெண்ணுவர்மாழ்கிமனப்
புண்ணுளராகிப்புலம்புவாபொய்யுடல்போக்கறியார்
தண்ணுளப்பங்கயத்தன்னமுலாங்கம்பைச்சண்முகனெவ்

ஆக்கிய வண்டத்துட் புண்ணியர் நிற்க வருவினையான்,
நீக்கிய பாதகர்க் கெல்லாந் தலைமை விளக்கிமருள், தேக்
கிய சிந்தையி னென்வாக் கியத்தின் சிறப்புணரேன், பாக்
கிய மென்னசொல் வேள்கம்பை வேலனைப் பாடுதற்கே.

உண்முகமாகவெளிமுகமாகவொருமுகத்தா
னெண்முகமாகத்துதிமுகமாகவிறைஞ்சுகரைத்

கண்முகமாகக்கருணைசெய்யுந்திருக்கம்பைநகர்ச்
சண்முகமாகந்தசாமிசிவானந்தசற்குருவே. (ருள)

முருகனென்றுங்கந்தனென்றுங்குகனென்றுமோகனமான்
மருகனென்றுங்குமரேசனென்றுங்கம்பைவாசனென்றும்
உருகனென்றுஞ்சற்குருமுன்னனென்றுஞ்சுகமோங்கமுதம்
பருகனென்றும்வஞ்சநெஞ்சேயிருத்தியென் பண்ணுவனே

அண்டாண் டம்மண் டலந்துன்பங் கொண்டிட வண்டி யண்டி, மிண்டகண் டம்புரி கண்டகர் மண்டி வெருண்ட மரிற், கண்டகண் டம்படக் கண்டுசண் டன்றேறுழக் கண் டனன்சூழ், கொண்டல்விஞ் சுந்தண் டலைக்கம்பை நன் குடி கொண்டவனே. (ருக)

காயாதவன்மரமீதேயெறிந்திடுங்கல்லெனவே
பீயாதலோபரிடஞ்சென்றுசெந்தமிழின்கவிதை
யோயாதனேகம்புகன்றிளைத்துன்புகழோதலுற்றேன்
சேயாதயாநிதியேகம்பைமேயசிவாரியனே. (கூ0)

மாம்பழமண்ணற்கு நல்கியிம் மண்வலம் வந்தனைக், காம்பழம் வேறென்னை நீபழ மென்றரா ஞடுரையென், பூம் பழ னச்செங்கென் முப்பழச் சாற்றிற் பொலியுங்கம்பை, யோம்பழ மெய்ப்பொரு ளேயரு ளாயெனக் குண்மை யையே. (கூக)

ஓம்பாகுவாகனன்றம்பிகம்பாபுரியுற்றநம்பி
பாம்பாகுமாபரணத்தான்மகன்புகழ்பாடுமென்வாய்
தேம்பாகுகற்கண்டுசர்க்கரைபால்பழந்தேன்மதுர
வேம்பாகுமென்றுமெ றுநின்றவாவென்னைவிட்டகலுதே.

ஆன்பாலரன்பாலுமையம்மைபாலேங்கையண்ணலின்பா
லுன்பாலலதுபிறர்பாலடைந்தொன்றுமோதகிலே [ன்
னென்பாலருள்செய்யவேறேதடைபிழையேதுசெய்தே
றென்பாலகத்தியன்றன்பாலருள்கம்பைத்தேசிகனே. ()

பதிதருமிக்கசித்திதருஞ்சற்குணபன்னிதரு
மதிதரும்புத்திரசெல்வந்தருமுடல்வன்மைதருந்
துதிதருந்தொண்டர்க்கிகத்திற்பரத்திற்சுகாதிதமாங்
கதிதருங்கம்பைச்சடக்கரசண்முகக்கற்பகமே. (கூச)

மாகாந்தளங்கரகுஞ்சரிவேடுவர்வஞ்சியுட
னேகாந்தமாகக்கணப்போதென்னுள்ளத்திருந்தின்மல
மோகாந்தகாரமகன்றிடுங்கம்பையுண்முன்னவபின்
யோகாந்தசித்தாந்தஞானத்தக்கதியுற்றிடுமே. (கூரு)

வன்மூன்றுமூன்றுடைக்காலமும்பூசைவழுவலின்றிப்
பண்மூன்றுமூன்றுதொழிலாளர்மன்னுகம்பாபுரத்தி
லெண்மூன்றுமூன்றுகன்ஞளின்விசாகத்தினிதுதித்த
கண்மூன்றுமூன்றுங்கரும்பினிற்பன்னிருகட்கரும்பே. ()

இகானந்த மன்றியொ ரானந்த மில்லையென் றெண்ணி யெண்ணி, மிகானந்தங் கொள்ளு மறிவிலி யென்றனை விட்டுவிடேல், சுகானந்த மெய்ததுு மென்னுங் குறிப்பினர் கூடுங்கம்பைச், சுகானந்த சண்முக சுந்தர ஞான சுதாகரனே. (கூஎ)

ஆணவசத்திபுரிகின்றவஞ்சமளவிலையான்
வீணவசத்திலுழலவிட்டாளத்தமெல்லிமிக

நாணவசத்தியினளாயகலமெய்ஞ்ஞானநல்காய்
காணவசத்தின்மயிலின்வருங்கம்பைக்காவலனே. (௬௮)

வித்துவஞானங்கடந்தப்புறத்தேவிளங்கவருந்
தத்துவஞானந்தவிர்ந்ததன்மேலுந்தழைத்தவருட்
சத்துவஞானமடைந்தவர்சூழ்கம்பைசற்குருநீ
யத்துவஞானத்தொருபரஞானமருளுகவே. (௬௯)

ஞானந்தமுள்ளிடைத்தாமடங்குற்றிடநாளுந்தம்முட்
டானந்தவின்பமடங்குறவேயென்றுஞ்சாரலின்றி
யானந்தநித்திரைசெய்யுநின்பாக்கடிமைசெய்தென்
னானந்தபவருளாய்கம்பைமேயவிறையவனே. (௭௰)

நேர்வந்தனைபிர[illegible]வொருவாரிதினையெடுத்து
மார்வந்தனையவினையாம்கவெனவைத்துநின்சொற்
கார்வந்தனைவைத்துப்பாறந்தாலந்தவாரனன்ருட்
சீாவந்தனைவிரதந்தருவாய்கம்பைத்தேசிகனே. (௭௧)

ஓரலைமேலொரலைவரும்வாரியினுள்ளிழிந்து
நீரலைநின்றபின்மூழ்குறவென்னுநினைவினன்போற்
பாரலைதுன்பமொழிந்தபின்கம்பைப்பதியுறையுஞ்
சீரலைவாய்க்குகன்பாதந்தொழவெண்ணல்சீலமன்றே. ()

நீரசங்காரளகக்குழலார்முகநேர்மலர
பாரசங்காரநகைபோலுயிர்ப்பப்பமரமிக்க
சாரசங்காரமிசைவிழியாகத்தயங்குங்கம்பைச்
சூரசங்காரசிங்காரகெம்பீரதுணைசெய்கவே. (௭௩)

வாடினன்வாடினன்வல்வினையாலதுமாற்றும்வழி
தேடினன்றேடினனல்வினையாற்கம்பைச்சீர்நகைரக்
கூடினன்கூடினன்கந்தப்பிரான்றிருக்கோலங்கண்டே
யாடினனாடினன்பாடினனீடினனானந்தமே. (எச)

சொல்லுந்திருவடிவேதாகமங்கடொடர்வினையை
வெல்லுந்திருவடிமெய்ந்நெறியன்பர்கள்வேண்டிநிதம்
புல்லுந்திருவடிவள்ளியைநாடியப்பூம்புனத்திற்
செல்லுந்திருவடிகாண்கம்பைநாதன்றிருவடியே. (எரு)

கூறுந்திருவடியெண்ணற்றவண்டாண்டகோடியெல்லா
நாறுந்திருவடிவீரவினோதநடனமயி
லேறுந்திருவடியின்பத்திருவடியேத்துமன்பர்
தேறுந்திருவடிகாண்கம்பைநாதன்றிருவடியே. (எசு)

எங்கேயிருந்தன்பரைப்படியெப்படியெண்ணுகினு
மங்கேயணைந்தவர்க்கப்படியப்படியார்தளிக்குஞ்
செங்கேதகைமணஞ்சேர்பொழிற்கம்பைநதிருநகர்ச்சேய்
பங்கேருகமணிநூபுரச்கிண்கிணிப்பாதங்களே. (எஎ)

பாசாந்தகாரமறுத்தோங்குமெய்ஞ்ஞானபானுவொக்கு
மாசாந்தயோகவமுதஞ்சொரியுமதிகிர்க்குங்
கேசாந்தமுத்தியளித்தொளிர்கச்சியிற்கீர்த்திபெறுந்
தேசாந்தண்கம்பைத்திருநகர்வாழ்குகன்சேவடியே. ()

கண்டேன் கம்பாபுரக் கோபுரக் காட்சி கரங்குவித்துக், கொண்டே னடைக்துபொற் கோயிலுன் ஞானக் குமரவ ள்ளல், தன்டேன் மலர்ப்பதஞ் சேவித்தன் பாளர்க டம்

மொடமு, தண்டேனுண் டேன்பவம் விண்டேன்வின்
டேனிது வுண்மையதே. (எக)

அல்லும்பகலுந்திருக்கம்பையம்பதியாண்டவன்சீர்
சொல்லும்பயன்பெறுநல்லடியார்க்கும்வன்றுன்பமெல்
புல்லும்பவமுடையேனுக்குமென்னை புகலுவகா [லாம்
ணெல்லும்பதருமென்றுமொவ்வாதிந்தநீணிலத்தே. ()

வீறுங்கொடிவச்சிரமங்குசங்கணைவேலபய
மீறும்வலத்திலிடத்திற்பாதமிளிர்நளினத்
தேறும்மணிமழுத்தண்டுவில்லுங்கொடுசெங்கரமீ
ராறுந்துலங்கவருவான்றிருக்கம்பையாண்டவனே. (அக)

பாரியகம்பையுள்வாழ்முருகையன்பதம்பணித்தாற்
சூரியனாதியகோள்களுநாள்களுஞ்சூழ்ந்துநிதஞ்
சீரியநன்மையையேதரும்வேறொருதீங்குஞ்செயா
தேரியமெய்த்துணையாமயின்மாமயில்சேவலுமே. (அஉ)

காட்டினிலுய்க்கிலுந்தீயினிற்றள்ளிலுங்கார்கொண்மலைக்
கோட்டினிலேற்றியுருட்டினும்வஞ்சக்குழிநரகின்
வாட்டினுமான்மறவேனயிராவதிமாதிருக்குழ்
காட்டினுட்சீர்க்கம்பைவேற்காரன்பாதகளினத்தையே. ()

மட்டார்மலர்ப்பொழிற்கம்பைக்குகேசன்மலர்முகமுங்
கட்டாமரையுமிளமூரலுஞ்செங்கனியிதழு
மொட்டாரைவென்றகைவேலும்புயமுமுடுத்தவரைப்
பட்டாடையுர்திருப்பாதமுங்கண்டனன்பாக்கியமே. ()

கோழிக்கு மோர்கவி குஞ்சுக்கு மோர்கவி கூறவதோ,
வாழிக் குமரவென் றோதிய வாணனை வன்மையிற்பின்,

பாழிக் குளிர்புய முட்டையென் றோதியொர் பாடல்பெற் றாய், தாழிக் குழந்தைசொற் றள்ளுதி யோகம்பைச் சண் முகனே. (அரு)

விண்ணேவின் னுதிய பூதங்க ளாகி விரிந்தவொன் றே, யெண்ணே யெழுத்தே யிரும்பொரு ளேயுயி ரின்னு ணர்வே, பண்ணேபண் ணின்சுவை யேபர மானந்தப் பாற்கடலே, கண்ணே மணிக்கம்பை வேலவ னேயெனைக் காத்தருளே. (அகூ)

நீயேகதியென்றுகம்பைக்குகேசநினைவணங்கித்
தாயேயருட்டந்தையேயிரங்காயென்சார்ந்தவெனைச்
சேயேவருகென்றழையாவிடிலுஞ்சினத்தசொல்லால்
நாயேபேயேயென்றுவைதாலுஞ்சாலுமெனக்கே. ()

வில்வச்சடைக்கம்பர்காமாட்சியம்மைவிரும்பருமு
வெல்வச்சவீருருவோருருவாகவியைதருள்செங்
கல்வச்சயிலக்கம்பாபுரவேலநின்காட்சியைக்காண்
செல்வச்சபையடியாருடனென்னையுஞ்சேர்த்தருளே. ()

கண்மலர்முத்தஞ்சொரிந்துகம்பைக்குகன்கான்மலரிற்
றண்மலரிட்டுப்பணிந்துகும்பிட்டுத்தம்வுணங்கி
யுண்மலரன்பிற்கசிந்தென்புநெக்குவருகின்று
பண்மலர்தோத்திரஞ்செய்குவதன்பர்பணிவிடையே. ()

நாயினுங் கீழ்ப்பட்ட வென்பொருட் டாயிங்கு நண்ணி யருட், டாயினு நற்றயை கூர்ந்தாண்டு கொண்டவொர் தன்மையினுற், சேயினு மிக்க சுதந்தரம் பெற்றனன் சீர்க்

கம்பைவேள், காயினு நன்மையல் லாலெனக் கேதுங் கலக்கமின்றே. (கo)

மண்ணும்புனலுங்கனலுமனிலமும்வானமும்வா
னண்ணும்பரிதியுஞ்சோமனுமாவியுமாலிரண்டா
வெண்ணும்வடிவகவர்தருபேதமிலையந்தனென்
கண்ணும்மணியுமெனக்கம்பைமேவியகந்தையனே. (கக)

வினையையுருவுகொண்டன்னமின்னார்விழிவேலையில்வீழ்ந்
தெனையேமறந்தழுந்திப்பலநாளுமிடருறுவே
னுனையேதியானிப்பதெங்ஙனங்கூடுமுவந்துவந்திங்
கெனையேயிகாம்பைநாதநின்றாட்புணையாலணையே. (கஉ)

பாடாதநிங்கும்பணியாதநீங்கும்பரிந்துனையே
நாடாதநீங்குந்திருவாளர்தம்மைநயந்துதொண்டு
கூடாதநிங்குங்குறையாதமெய்யன்புகொண்டுமகிழ்
நீடாதநீங்குந்தவிாத்தாள்ககம்பையுணித்தியனே. (கங)

எங்குந்தலமெனக்கொண்டாயெனினுமினியவன்பு
பொங்குந்தலமெழிற்கம்பாபுரமெனப்புக்கிருந்தா
யிங்குந்தலமுடையேற்கருட்சண்முகவின்பமுடன்
றங்குந்தலகின்னடித்தலமாமித்தலந்தனிலே. (கச)

சீரார்திருக்கம்பைநாதனின்கோயிற்செழும்பணியு
மாராதமெய்யன்பின்மூவிருகாலத்தருச்சனையு
மேராரும்வாகனமுற்சவமாதியவின்பொடுசெய்
பேராளரெங்குலதெய்வமன்னோர்புகழ்பேசுவனே. (கரு)

தமராய்பிதாகுருதெய்வமுமாகித்தயைசெய்கம்பைக்
குமராதிருத்தணிகாசலனேவள்ளிக்குன்றவனே
சமராபுரித்தலைவாமயிலத்துறைசண்முகனே
வமராபதிக்கரசேயடியேனுன்னடைக்கலமே. (கக

கன்றுபரங்கிரிவாழ்முருகாசெந்திநாயகனே
யென்றுந்திருவாவினன்குடியாயுயரேரகத்தாய்
குன்றுதொறாடியகோவேபழமுதிர்சோலைக்குகா
வன்றுமின்றும்பினுஞ்சேயேனுனக்கேயடைக்கலமே. ()

புத்தியும்யுத்தியும்பூரணவாயுளும்பொன்மணியும்
சுத்தியுள்ளும்பலசித்தியுநல்கியந்துசிவ
பத்தியுஞ்சாதுசங்கத்தினிற்கூடும்பரமசுக
முத்தியுந்தந்திடுங்கம்பையுள்வாழுமுருகையனே. (கஅ)

மெய்யன்பி னுற்பெரி யோர்கள்சொற் பாடலின் மே
ன்மைகண்டும், பொய்யன்பி னலடி யேன்வினை யாட்டிற்
புனைதமிழை, யுய்யன்பி னிவன் சொற்றதன் றுயினு
மோங்குங்கம்பை, யையன் பிணையலென் றேபொறுப்
பார்க ளறிஞர்களே. (கக)

சேணுடர்சூழ்கதிர்காமக்குன்றுக்குடிதென்பழனி
சோணுசலங்குமரக்கோட்டமாதியதாய்தலங்க
ளுணுளும்வாழ்கம்பைநாதனின்பூங்கழனங்கையர்கண்
மாணுடியவர்வேன்மயில்கோழியும்வாழியவே. (க00)

கம்பை முருகர்
அலங்காரம் முற்றிற்று.

உ

கணபதி துணை.

# கம்பைச்சந்நிதிமுறை

# வெண்பாமாலை.

## காப்பு.

அருக்கன்குளிரவலர்பூம்பொழில்சூழ்
திருக்கம்பைவாழ்கருணைச்செவ்வேட் - குருக்கமுட
னற்பகவெண் பாமாலைநன்குதொடுத்தணியக்
கற்பகவிநாயகன்றாள்காப்பு.

## நூல்.

அருள்சுரக்குங்காட்சியாறுமுகங்கண்டு [ய்
தெருள்சுரக்குந்தோத்திரங்கள்செய்யப் - பொருளளிப்பா
தந்தையாயன்னையாய்ச்சற்குருவாய்த்தெய்வமுமாய்
கந்தையாகம்பைமுருகா. (க)

அபயமபயமென்றேயளிபோல்யானுன்
னுபயபதத்தாமரையினுற்றேன் - விபவத்
திருமணியேசெம்பொன்னேதெள்ளமுதேயென்கட்
கருமணியேகம்பைமுருகா. (உ)

ஓதியுணர்ந்தாரையுற்றவர்க்குத்தொண்டுசெய்து
நீதியுணர்ந்துநிலையறிந்து - யாதொன்றும்
பெற்றறியேனுய்வதெவன்பேதையேன்ஞானமுறை
கற்றறியேன்கம்பைமுருகா. (ஙு)

ஐயவுனதொண்சீரருளாலடிநாயேன்
வெய்யவெழுநரகின்வீழ்ந்தாலு - மையல்
விலங்குவேன்பாவத்தால்வீழ்ந்தான்மிகவுங்
கலங்குவேன்கம்பைமுருகா. (௪)

பெற்றார்வெறுப்பாரேற்பிள்ளைதனைப்பேருலகின்
மற்றார்மகிழ்ந்துவளர்ப்பார்கள் - சற்றேனும்
பொய்விடேனாயினுநின்புத்திரனன்றோவெனைநீ
கைவிடேல்கம்பைமுருகா. (௫)

வேளையெரித்தெழுப்பும்வித்தகனார்கண்ணின்வரு
காளையுனதாளைக்கதியென்றிந் - நாளடைந்தேன்
விண்பாராய்நின்றவிமலனேநின்கருணைக்
கண்பாராய்கம்பைமுருகா. (௬)

சிங்காரவேலிருக்கச்சீரார்மயிலிருக்க
வுங்காரச்சேவலுயர்த்திருக்க - விங்காரச்
சிந்திக்குநெஞ்சிருக்கத்தீங்குண்டோசோலையெங்குங்
கந்திக்குங்கம்பைமுருகா. (௭)

கந்தா குமராகதிர்வேலாகாங்கேயா
வெந்தாய்குகனேயெளியேனை - வந்தாள்
பிரமனேமாப்படங்கப்பேரருளாற்குட்டுங்
கரமனேகம்பைமுருகா. (௮)

மோனமுடிவேமுழுமுதலேபேசருமெய்ஞ்
ஞானவடிவேநவநிதியே - யானவுனை
யண்ணியனேயென்றென்றருச்சிக்கும்வாழ்வருளாய்
கண்ணியனேகம்பைமுருகா. (௯)

பாசவலையிற்பட்டுப்பாவமதுமேலிட்டு
மாசவலைப்பிள்ளையெனவாடுகின்றே - னேசவமு
தூட்டுவாய்காப்பாய்மேலுய்யுநெறியீதென்று
காட்டுவாய்கம்பைமுருகா. (௧௦)

அதிகாலைமூழ்கியலரெடுத்துச்சாத்தித்
துதியாடிக்கோயில்வலஞ்சூழ்ந்து - கதியென்பார்
தொண்டுகொண்டேமேலாஞ்சுகமளிக்குநின்னியதி
கண்டுகொண்டேன்கம்பைமுருகா. (௧௧)

சுகந்தமலர்த்தாமரைக்குச்சூரியனல்லாம
லுகந்ததலைவன்பிறிதுமுண்டோ - சகந்தனிலே
வித்தநேயத்துடனேநின்னையடையென்றனுக்கியார்
கத்தனேகம்பைமுருகா. (௧௨)

இஞ்ஞாலக்கங்குலிரியக்கடலுதிக்குஞ்
செஞ்ஞாயிறொப்பவன்பர்ச்சேருமுயர் - மெய்ஞ்ஞான
விண்மணியேயுள்ளம்விகசிக்கப்பாரரனோர்
கண்மணியேகம்பைமுருகா. (௧௩)

பழவடியார்கூட்டத்துட்பாலகனேன்கூடித்
தொழுவடியையென்முடிமேற்சூட்டாய் - இழவடிவங்
கொண்டவனேயன்பிற்குறமானைக்கூடியின்பங்
கண்டவனேகம்பைமுருகா. (௧௪)

பாலுந்தண்ணீரும்பதார்த்தமிரண்டாகவிருந்
தாலுங்கலந்தாலபேதமாம் - போலுமிந்த
வெய்யனேனன்பர்தமைமேவிடுனென்றுவேன்வேற்
கையனேகம்பைமுருகா. (௧௫)

மோனநிலையந்தமாய்மூன்றுமனுட்டித்தவர்க்கே
ஞானநிலைகிட்டுமென்பர்நல்லோர்க - ளானதனு
லீங்கேயாளென்புரிவேனின்பஞானந்தருவாய்
காங்கேயாகம்பைமுருகா. (௯

எத்திசையுமன்பர்குழாமேத்தியிறைஞ்சக்களித்துப்
பத்திநெறிகாட்டிப்பணிகொண்டு - முத்திதரு
நிற்கண்டேனென்குறையைநீகண்டேயின்னருள்செய்
கற்கண்டேகம்பைமுருகா. (௧௰

சாடுகின்றவெம்பசிக்குத்தக்கசப்பிவாய்ப்பெயினும்
கூடுகின்றகுப்பைகிளைகோழிபோ - லோடுகின்ற
தீனனேன்சொற்குச்செவிகொடுப்பாயோசாம
கானனேகம்பைமுருகா. (௧௧

அன்புடையவென்னைச்சுகமுடையனுக்கச்செய்
தின்புடையதொண்டரிடையுய்ப்பா - யன்புடைய
வெண்ணுடையாயீராறெழுத்துடையாய்பன்னிரண்டு
கண்ணுடையாய்கம்பைமுருகா. (௧௯)

ஐயவுனக்கேயபயம்புகுந்தவெனக்
குய்யவொருநெறியுமோதிலையான் - செய்த
புளையாதோபட்டதுயர்போதாதோவுள்ளங்
கனையாதோகம்பைமுருகா. (௨௦)

சிங்காரவேலேந்துஞ்சேவகனேசூரனெனு
மங்காரதானவனையட்டவனே - மங்காத
அட்டமோகப்பயல்செய்துக்கமடக்கமிக்க
கட்டமோகம்பைமுருகா. (௨௧)

குன்றுதொறுமாடுங்குளிர்கமலச்சேவடிக்கு
நன்றுசுகங்கொடுக்குநாயினே - னென்றுமே
யில்லாகும்வந்தமர்வாயேனென்னின்மானகருங்
கல்லாகுங்கம்பைமுருகா. (௨௨)

கூடியங்கேதேவர்குறையிரக்கவஞ்சலென
வோடியன்பாய்விண்காத்தவுத்தமனே - வாடியிங்கே
வந்தவெற்பாராதென்னைவஞ்சனையோவஞ்சினையோ
கந்தவெற்பாகம்பைமுருகா. (௨௩)

தூமாந்தர்நின்னருட்டேன்றுய்த்துமகிழ்ந்திடயான்
காமாந்தகாரமெனுங்கள்ளுண்டிங் - கேமாந்தேன்
றன்மமோயாரிட்டசாபமோவென்னுடைய
கன்மமோகம்பைமுருகா. (௨௪)

பரமாதிமூன்றையுநற்பாகத்தாற்கண்டு
திரமாஞ்சகங்கழித்தசீவ - னுரமா
கிதியடையும்பின்னர்நிகரிலாவின்பக்
கதியடையுங்கம்பைமுருகா. (௨௫)

சஞ்சலமாம்வெங்நெருப்பைத்தண்ணருளாம்வெள்ளத்தா
லிஞ்சலுறுதவிக்கவேண்டியே - கெஞ்சு [ல்
முடல்போலுமென்னுளுயிர்போலும்வாழ்வாய்
கடல்போலுங்கம்பைமுருகா. (௨௬)

அருணகிரிநாதாகத்தியர்நக்கீரர்
தெருளவ்வையார்முதலாச்சேர்ந்த - பெரியோர்க்
கிலக்கமுண்டோநாயேனுமேத்தநின்றேனெற்குங்
கலக்கமுண்டோகம்பைமுருகா. (௨௭)

மனையாளுமைந்தர்களுமன்னுமுறவோரும்
வினையாளுஞ்சூழும்விழைவி - னனாளு
முண்டேனுமையமலுழன்றலுத்தேன்யாதுபலன்
கண்டேனுன்கம்பைமுருகா. (உஅ)

காயேன்பலநாளுநன்மைசெயேன்றீமைசெய்வே
னீயேன்சும்மாவிருத்தனீதியோ - நீயோனைத் [றுய்ப்
தண்டிப்பான்மன்னவனைத்தன்மையைப்போலென்னைநல்
கண்டிப்பாய்கம்பைமுருகா. (உகூ)

தனமலையுங்கண்ணையிலுஞ்சாயன்மயிலு
புனமருவக்கண்டங்குப்போந்து - வனசரர்தம்
பெண்வலையில்வீழும்பெருமானேவீழ்திமற்றென்
கண்வலையிற்கம்பைமுருகா. (௩௦)

சாதுசங்கஞ்சேராமற்றன்மநெறியோராமற்
றீதுசங்கற்றீராமற்சிந்தித்து - யாதுசங்க
பூரணமோகாடவியிற்புக்குவேனூழ்வினையின்
காரணமோகம்பைமுருகா. (௩க)

தவமேபுரியாமற்றண்மலர்சாத்தாமற்
பவமேபுரிந்துபசியா - னவமே
யுணக்கறியேசோறேயென்றூர்திரிவேனுய்யுங்
கணக்கறியேன்கம்பைமுருகா. (௩உ)

மருள்செய்தவஞ்சமனத்தினேன்றன்னை
யருள்செய்துநீயன்பால்யாத்துத் - தெருள்செய்தால்
வெல்லுவேன்வல்வினையைவீறுமல்வேருடனே
கல்லுவேன்கம்பைமுருகா. (௩௩)

தானமறியேன்றவமறியேன்பேரின்ப
ஞானமறியேனலமறியேன் - நினனே
னீட்டுவேன்வாய்வார்த்தைநின்னடியார்க்கென்சொல்லிக்
காட்டுவேன்கம்பைமுருகா. (கூச)

எத்தனையோவீண்கூட்டமெத்தனையோவீண்வார்த்தை
யெத்தனையோவீண்செய்கையிட்டுபல - மத்தனையும்
பண்ணுளாயென்னைப்படைத்தனையோபன்னிரண்டு
கண்ணுளாகம்பைமுருகா. (கூரு)

துன்பாலடியேன்றவளுகின்றகாலத்து
மன்பாற்பிறர்பாலடைந்துரையே - னின்பா
னுவலுவேன்றன்னருட்பணுக்காயேலந்தோ
கவலுவேன்கம்பைமுருகா. (கூசா)

நீராறுமூழ்கியொளிர்நீறணிந்துகண்டிகைபூண்
டோராறெழுத்துன்னுமுண்மைசொலா - யீராறு
நேத்திரனேகாற்றிசையுநேர்த்தியுடன்றேத்திரஞ்செய்
காத்திரனேகம்பைமுருகா. (கூஎ)

ஆராவமுதேதவயில்வேலரசேயென்
றோராயிரகாமமோதியே - காராவி
னம்பீரானன்பினபிடேகிக்கத்தயைபார்
கம்பீராகம்பைமுருகா. (கூஅ)

ஊழின்பெருவலியோயுன்னைநினையகிலே
னுழித்துரும்பாயலைகின்றேன் - கோழித்
துவசனேகாப்பாய்மெய்த்தொண்டர்தமைக்காக்குங்
கவசனேகம்பைமுருகா. (கூக)

பஞ்சும்படாப்பாடுபட்டேன்முறையிட்டே
னஞ்சும்பெருந்துயர்தீர்த்தாட்கொள்வாய் - விஞ்சுமிரா
றங்கணுதொண்டரையேயாதரிக்கவேபுனைந்த
கங்கணுகம்பைமுருகா. (௪0)

கொடியபிறப்பென்னும்வெங்கோடையிலுல்வாடி
யடியடைந்தேன்சாந்தமளிப்பாய் - நெடிய
நிழலவனேகுரட்டகிர்ப்பயனேவீரக்
கழலவனேகம்பைமுருகா. (௪௧)

பல்லாயிரங்கோடிபத்தரிளகுமனத்
துல்லாசராய்க்களங்கமோவியுய்யப் - பொல்லா
வுளங்கனேராயிருக்குமுண்மையிலுல்யானே
களங்கனேகம்பைமுருகா. (௪௨)

ஒன்றிரண்டோபாவமொருகோடிசெய்ததுண்டா
னின்றிவைகள்சோதிக்கநீதியோ - நன்றன்
றமலனேவேதசிரத்தாடுமருட்பாத
கமலனேகம்பைமுருகா. (௪௩)

செத்தாற்பிறப்புஞ்செனித்தாலிறப்புமுள
வித்தாரணிமீதினின்பமென்னே - வைத்த
தொருத்தனேனூழ்வினையோவுன்னருளோவாதி
கருத்தனேகம்பைமுருகா. (௪௪)

பசிக்கின்றபோதும்பலசுவையோடன்னம்
புசிக்கின்றபோதும்புதிதாய் - வசிக்கின்ற
மான்மறவேற்கண்ணூர்மருவும்போதாயினுநின்
கான்மறவேன்கம்பைமுருகா. (௪௫)

உதித்தேன்வளர்ந்தேனுலகமெலாஞ்சுற்றி
மிதித்தேனனுத்தேன்வெறுத்தேன் - றுதித்தடியே
னுவலாயுன்னையேயன்னையேயென்றடுத்தேன்
காவளாகம்பைமுருகா. (சசு)

பாசிபட்டுநாறிப்பருகவுதவாச்சுனைபோன்
மாசுபட்டுக்கிழ்ப்பட்டவஞ்சநெஞ்சைத் - தேசுபட்ட
வற்பகமேயாக்கவருமையோசித்தாற்றக்
கற்பகமேகம்பைமுருகா. (சஎ)

கும்பமுலைமடவார்கோபவாயைப்பார்த்துச்
செம்பவளமென்றுகொவ்வைத்திங்கனியென் - றிம்பரன்பு
பூணுவேனின்னன்புபூணேனெவ்வாறுய்தி
காணுவேன்கம்பைமுருகா. (சஅ)

அறிஞர்க்கடையாளமம்புவியிலென்னே
யிறைஞ்சியுனையேத்தவதேயென்ப - குறிஞ்சிநில
வேந்தனேயேத்தாமையீனலவேற்கென்னைவள்ளி
காந்தனேகம்பைமுருகா. (சகூ)

யான்டுநோயில்லாருக்கேனையுடையார்க்கே
வேண்டுமெருந்துவிதியீதே - யீண்டு
மிருணையேன்வேண்டுவனுலின்னடியார்க்கேனின்
கருணையேகம்பைமுருகா. (ருo)

நிலமும்பதியுநிதியுமழகுங்
குலமும்பெலமுங்குறையி - னலமு
முடையவனேயானுமுன்னன்பிலாளேற்
கடையவனேகம்பைமுருகா. (ருக)

பொன்னாசைபெண்ணாசைபூமியின்மேலாசையன்றிப்
பின்னாசையில்லையிவைபோராசை - யுன்னாசை
வஞ்சனேனுக்கென்றுவந்திடுமோசீர்பாத
கஞ்சனேகம்பைமுருகா. (ருஉ)

ஐங்காததூரத்தனைக்காசுறுமென்றுற்
றங்காதனைக்கணத்திற்சார்குவே - னங்கேபோய்
மேல்வருந்துன்போனின்மெய்க்கோயில்சூழவென்றுற்
கால்வருந்துங்கம்பைமுருகா. (ருங)

தெரிந்துங்கொடும்பாவஞ்செய்கின்றேனந்தோ
பரிந்துமொருபுண்ணியமும்பண்ணே - னெருங்கிச்
சினங்கொண்டவேமபடாள்சேர்ந்திடினென்செய்வேன்
கனங்கொண்டகம்பைமுருகா. (ருச)

தாயுந்துயிலவப்பன்றூன்றுயிலச்சோதரு
நாயுந்துயிலநகர்துயிலப் - பேய்துயிலு
நள்ளனேரத்தெயினர்நங்கையைக்கொண்டேகியநீ
கள்ளனேகம்பைமுருகா. (ருரு)

சிரம்வணங்கிக்கும்பிட்டுச்சிந்தையொருமித்துப்
பரவசமாய்நின்றுபணிந்து - விரவுதுதிப்
பாட்டுவாயர்க்குன்பதங்காட்டுவாயெனக்கென்
காட்டுவாய்கம்பைமுருகா. (ருசு)

துன்புமுதிர்வெம்பனியாய்த்தொல்லைவினைவல்லிருளாய்
முன்புமுதிரவிவைமோயவெண்ணி - யன்பு
முதிரவனேதாமரையாமுன்வருநீஞானக்
கதிரவனேகம்பைமுருகா. (ருஎ)

நாடுபோலோரிடத்தின்வாய்ந்தபுன்மேயாமலற்ப
வாடுபோலோடியலைந்தென்போற் - கேடொருவர்
கொண்டதுண்டோவுண்டென்றுகூற்றுமுண்டோகேட்ட
கண்டதுண்டோகம்பைமுருகா. [துண்டோ

காலையினுமாலையினுங்காதலினுன்னன்பருக்கே
வேலைசெயவைத்தருளாய்வேலையனே - சோலை
யரும்புவிளைதேன்பாய்ந்தகனிலத்துச்செந்நெல்
கரும்புவிளைகம்பைமுருகா. (௫௯)

பொன்னாட்டிவாணர்புகழ்ந்தேத்துஞ்செந்தமிழின்
சொன்னாட்டிவாணர்சுகம்விரும்பி - யிந்நாட்டி
னாட்சியாயென்றுமமர்ந்தனைநீயீதெவர்க்குங்
காட்சியாங்கம்பைமுருகா. (௬0)

மல்லல்வெறுக்கைமிகவாய்ந்தவனேயானாலு
மல்லல்வறுமையுளனானாலு - நல்ல
நனவானேநின்னைநயந்துருகுவானேற்
கனவானேகம்பைமுருகா. (௬௧)

சாமானியனைத்தமிழ்மாலையால்வதன
சோமாசிலையர்ச்சுனாவடல்சேர் - வீமா
சதிர்காமாவென்றுபுகழ்தாழ்வகற்றியாளாய்
கதிர்காமாகம்பைமுருகா. (௬௨)

பூனைமுகங்கண்டகிளிபோன்மறலியைக்கண்டு
கானைவுருவின்பகல்காய்நற்றெய்வ - யானை
மணவனேவேடர்வளர்த்தவள்ளியம்மை
கணவனேகம்பைமுருகா. (௬௩)

அம்மைகாமாட்சியரும்பெறலேயேகம்பர்
மும்மையார்கண்களிக்குமூத்தையா - வெம்மை
நலிதீராச்சேயேனைநன்றுகண்பார்த்தென்றன்
கலிதீராய்கம்பைமுருகா. (௬௪)

மரணமுறுமென்றேவருந்துமெனைவந்தித்
தருணமுமவந்தாளாய்சரணஞ் . சரண
மனகமேயன்பேயருளேமணியே
கனகமேகம்பைமுருகா. (௬௫)

அன்னைநீயென்றேயடைந்துசரணமிட்டே
னென்னைநீகாவாயேலிப்பழிதா - னுன்னை
விடாசலாபாகடம்பாவேலாகுகாவேங்
கடாசலாகம்பைமுருகா. (௬௬)

போற்றற்கெளிவருநின்பூங்கமலச்சேவடியெந்
தோற்றக்கடல்கடக்குந்தோணியா - மேற்றமுத்திக்
கேணியாமொப்பற்றவின்பச்சுகம்விளையுங்
காணியாங்கம்பைமுருகா. (௬௭)

என்றும்பவமேயிழைக்குமவரைக்கூடி
நன்றென்பதொன்றேனுநாடாதே - யுன்றனக்கே
யெட்டியேயானுமென்றனக்குநீகரும்பங்
கட்டியேகம்பைமுருகா. (௬௮)

உபயபதச்சிலம்பிஞ்ஞைசைவழியேபோய்
விபவமடைந்துய்ந்தமேலோர் - நபமலர்த்தா
ளோதலனேனுனுமுய்யவருள்யானுனது
காதலனேகம்பைமுருகா. (௬௯)

ஊனுயிராயுணர்வாயமர்ந்தவருட்
கோனாய்விளங்குங்குமரனீ - யானென்
மடமையேனாலும்வந்தாளயார்க்குக்
கடமையேகம்பைமுருகா. (௭௦)

புகழ்ந்தான்மகிழ்வேன்புகுந்தொருவன்மற்று
மிகழ்ந்தால்வருந்துவேனென்னே - மிகுந்த
விடம்பனேற்கொத்தமனமென்றவருந்தண்பூங்
கடம்பனேகம்பைமுருகா. (௭௧)

என்னிரண்டுகண்ணுக்கிராறுவிழியாறுமுகம்
பன்னிரண்டுதோளழகும்பார்ப்பரிதென் - றன்னிரண்டு
தாளையேநாடத்தவஞ்செய்வேன்மான்பிடிசேர்
காளையேகம்பைமுருகா. (௭௨)

நன்னிதியேஞானகுருநாதனேயானுனது
சந்நிதியைச்சேரத்தயைசெய்தாற் - பின்னருய்வேன்
யாக்கையும்பொன்னிறமேயாகுமான்மேருவண்டூங்
காக்கையுங்கம்பைமுருகா. (௭௩.)

அறமின்பங்காட்டுமரும்பொருள்போலீச
னறுங்குழலைக்காட்டநடுவே - யுறைந்தருளு
மைந்தனைமைந்தன்மனத்துறையுநாளுளதோ
கந்தனேகம்பைமுருகா. (௭௪)

எண்ணுமூன்றன்பேர்கேட்டால்யாருருகார்காட்டகத்து
நண்ணுமரமுநனியுருகு - மண்ணுருகும்
புல்லுருகுமாவுருகும்புள்ளுருகும்வெய்யகருங்
கல்லுருகுங்கம்பைமுருகா. (௭௫).

அன்பேவடிவாயவசமடைந்தோர்பெ
ணின்பேருரைக்குநிலையறிந்து - முன்போய்
வரந்தந்தாய்காந்தண்மலர்போலும்வெட்டுண்
கரந்தந்தாய்கம்பைமுருகா. (எசு)

மாங்கனியைவேண்டிவலமுலகஞ்செய்ததெண்ணி
யாங்கனிவினின்பாதமேத்துகின்றேம் - பாங்காய்த்
தனியேன்றற்கொல்லைவளர்தத்தைக்கினிய
கனியேநற்கம்பைமுருகா. (எஎ)

குலவுமுறையொன்றுங்கோடாதியற்றி
நிலவுமுறுவலன்பர்நெஞ்ச - மலரி
னடந்தவனேயென்கனெஞ்சினண்ணுவையோசூரைக்
கடந்தவனேகம்பைமுருகா. (எஅ)

சூழுமவர்நோயைத்தொலைப்பாய்நிற்சூழாம
லாழுமயலேனையகற்றுவையோ - வேழுலகும்
பூத்தவனேவிண்ணிற்புலோமசையின்பொற்றாலி
காத்தவனேகம்பைமுருகா. (எகூ)

கள்ளன்கொடியன்கலதியிவனென்று
தள்ளலையநின்பாற்சரண்புகுந்தேன் - வள்ளலே
மாகமேற்கற்பகத்தைமன்னினமுதுண்ணுமென்பர்
தாகமேகம்பைமுருகா. (அ0)

வாழையடிவாழையெனவந்துனதுமாற்றுயர்ந்த
மாழையடிவாழ்த்தடியார்வஞ்சலையி - லேழை
யடியனேனென்றென்றுசாரார்ந்திடினுஞ்சாலுங்
கடியனேன்கம்பைமுருகா. (அக)

சயந்தன்கனவிற்றரிசனந்தந்தாய்நீ
நயந்தன்னவனுமுய்ந்தானுயேன் - வியந்து
நனவிலுந்தாவெனெண்ணியுமென்னண்ணுவையோவென்றன்
கனவிலுந்தான்கம்பைமுருகா. (அ௨)

தோன்றுமுடலுந்துனிசேர்பொருளுமிக
வேன்றுமகிழுமுயிருமென்னுமொரு - மூன்று
மளித்திடுவேனீயென்னளிக்கினும்யான்பெற்றுக்
களித்திடுவேன்கம்பைமுருகா. (அ௩)

தொண்டனேனென்றன்னைநீசோதிக்கநீதியுண்டோ
கண்டகவெஞ்சூரன்முனங்காணவுருக் - கொண்டு
பரந்தவனேயன்னவனும்பார்த்துமயங்கக்
கரந்தவனேகம்பைமுருகா. (அ௪)

மூந்துமுழுவலன்பர்மும்மலமுமோயநிதம்
வந்துமுழுகானந்தமாகடலிற் - சிந்துந்
திவலையேசாலுமிதுசேர்வதெவ்வாறீதே
கவலையேகம்பைமுருகா. (அ௫)

எப்பற்றும்விட்டவர்க்கேயின்பமுத்தியுண்டென்பர்
துப்பற்றவர்க்கென்சுகமுண்டே - யொப்பற்ற
புண்ணியனேபேறுதரும்புங்கவனேபூங்கடப்பங்
கண்ணியனேகம்பைமுருகா. (அ௬)

பொருந்துமிருட்காட்டிற்புகுந்துகைக்கோல்போயே
வருந்துங்குருட்டமென்மான - விருந்திங்
குழலுவேனின்னருட்கணுண்டாமேற்றுன்பங்
கழலுவேன்கம்பைமுருகா. (அ௭)

புக்கவெயிலிற்புழுப்போல்வருந்துமெனை
மிக்கணமேகண்பார்த்திரட்சிகண்டாய் - மிக்க
வழகனேயாறுமுகத்தண்ணலேயன்பர்
கழகனேகம்பைமுருகா. (அஅ)

வெள்ளிமலைவித்தகர்க்குவேதனறியாப்பொருளைத்
தெள்ளிமலைவின்றுரைத்ததேசிகபோய் - வள்ளிக்கு
நீசலாமிட்டதென்னநேர்த்திகாண்சீர்த்ததணி
காசலாகம்பைமுருகா. (அக)

துன்பக்கடல்வீழ்ந்ததொண்டனேன்றன்னையெடுத்
தின்பக்கரைவிடுக்கயாதுதடை - யன்பி
னைளந்தவனேபன்னிருகையாயசுரக்காட்டைக்
களைந்தவனேகம்பைமுருகா. (கூ0)

எண்ணவொட்டார் பாடவொட்டா ரென்றுமுனைச் சா
ர்ந்துவலம், பண்ணவொட்டா ரேழையென்ன பண்ணு
வே - ன்ன்னு, முலகமெலா மோருமுனக் கோதலென்
னே யையவர், கலகமெலாங் கம்பை முருகா. (கூக)

இச்சையினிற்சேவிக்கயானழைத்தும்வாராதென்
பச்சைமயில்விட்டுப்பறந்ததோ - வைச்சதொரு
சீலமோமெய்யடியார்சிறுவரோவன்றுகலி
காலமோகம்பைமுருகா. (கூ௨)

பெருமைந்தராந்தொண்டர்பேறுபெறவைத்திவ்
வொருமைந்தன்மேல்வெறுப்பேனோதா - யருமந்த
கல்யாணுதம்போனவிலுமெந்தாய்வள்ளிமகிழ்
கல்யாணகம்பைமுருகா. (கூ௩)

எத்தனைவன்றுன்பங்களெய்துகினுமெய்தகையா
னத்தனைக்குஞ்சற்றேனுமஞ்சிடேன் - சத்தி
தாணனேயுன்றன்சரணடைந்தேனந்தக்
கரணனேகம்பைமுருகா (கூச)

பேரானந்தக்கடலிற்பெட்பிஞெடன்பரிடைச்
சேரானமன்சேர்ந்தார்தீங்கடைவா - னீரி
னயல்பாயுஞ்சிச்சிலியுமஞ்சியறவாவிக்
கயல்பாயுங்கம்பைமுருகா. (கூரு)

ஏறுருகின்னடிக்குற்றேவல்செயவைத்தியந்தச்
சேஞட்டினின்பமதைச்சிந்தியே - ஞேறுங்
கோவேயாங்குமாதர்குளிர்பூப்பறித்தணியக்
காவேயாங்குகம்பைமுருகா. (கூசு)

நாடுபரங்குன்றுசெந்தூராவல்லாவினன்குடிசீர்
கூடுதிருவேரகங்குன்றுதோ - றாடல்
பழமுதிர்சோலையும்வாழ்பண்ணவனேநின்பூங்
கழன்மறவேன்கம்பைமுருகா. (கூஎ)

இகத்தும்பரத்துமுயரின்பங்கொடுக்கு
மகத்துவமெய்ஞ்ஞானமணியே - மிகுத்த
திடவுளேவந்தமர்வாய்சீர்க்குமரகோட்டக்
கடவுளேகம்பைமுருகா. (கூஅ)

தென்சொல்லின்வல்லமைசெழும்புலவரன்பினுரை
பொன்சொல்லினென்னுடையபுன்சொல்லு - நன்சொல்
முச்சிவருங்கொன்றையறுகுந்தைகம்பர்சூடியவா [லா
கச்சிவருங்கம்பைமுருகா (கூகூ)

வாழியயில்வாழிமயில்வாழிகொடிவாழியன்பர்
வாழியுயிர்வாழிசைவமாமறைநூல் - வாழி
கிழல்வாழிமாதரொடுகேவாழிநின்பூங்
கழல்வாழிசம்பைமுருகா. (கoo)

வெண்பாமாலை முற்றிற்று.

# தாலாட்டு.

## காப்பு.

பாலாட்டுமென்பருய்யப்பாக்கருளக்கம்பைநகர்
மேலாட்டுவேந்துறைசெவ்வேள்விரும்புந் - தாலாட்டுப்
பாட்டுரைக்கநெஞ்சேபதிவிகடசக்கரன்றாள்
வேட்டுரைக்கவேண்டுமிதுவே.

பூவோங்குபொன்னகரம்போலோங்கிக்கற்பகம்போற்
காவோங்குசெல்வநிறைகம்பைவளர்சண்முகனே. (க)

எண்ணிலுலகமெல்லாமீடேறக்கம்பேசர்
கண்ணில்வருகண்மணியோகம்பைவளர்பொன்மணியோ.

அளிக்குமருட்காமாட்சியம்மையணைத்துள்ளங்
களிக்குமிலஞ்சியமோகம்பைவளர்சேயவனே. (ந)

சரவணப்பூந்தொட்டிலிடைத்தானமர்ந்தஞானக்
கருணைத்திருவுருவோகம்பைவளர்காரணனே. (ச)

பார்த்திகையோரெட்டும்பரவமுலைப்பால்கொடுத்த
கார்த்திகைமின்னார்மகவோகம்பைவளர்நாயகனே. (ரு)

அங்கைத்தலத்தாலனைத்தன்பொடுசுமந்து
கங்கைமகிழ்மகனேகம்பைவளர்காவலனே. (சு)

தாட்சிலம்புகொஞ்சத்தளர்நடையிற்பெற்றோர்க்குக்
காட்சிதருங்காட்சியோகம்பைவளர்கண்மணியனே. (எ)

சர்வமுந்தாமென்னுமுருத்தாங்காட்டித்தேவர்கொண்ட
கர்வந்தொலைத்தவனேகம்பைவளர்கொற்றவனே. (அ)

நவவீரரோரிலக்கர்நற்றுணைவர்போற்றக்
கவினுரவந்தவனேகம்பைவளர்காதலனே. (கூ)

நாரதன்செய்வேள்வியிடைநண்ணுந்தகரையலங்
காரமுறவூர்ந்தவனேகம்பைவளர்காட்சியனே. (கO)

திசைமுகனைக்குட்டிச்சிறைபுரிந்துபின்னர்
கசியவருணேத்திரனேகம்பைவளர்காத்திரனே. (கக)

வேதனறியாதமறைமெய்ப்பொருளைச்சங்கரனார்
காதிலுரைவாசகனேகம்பைவளர்தேசிகனே. (கஉ)

முதிர்நகையாலூரர்முனிந்தமுக்கணனார்கையிற்
கதிர்வடிவேல்பெற்றவனேகம்பைவளர்நற்றவனே. (கங)

அல்லல்புரிதாருகனையட்டவனேவஞ்சகஞ்செய்
கல்லகத்தைக்கீண்டவனேகம்பைவளராண்டவனே. (கச)

மிண்டசுரன்றன்கருத்தைவீரமொய்ம்பற்றாதுவிட்டுக்
கண்டகருணாகரனேகம்பைவளர்சேகரனே. (கரு)

நனவின்மறவாதநஞ்சயர்தன்காணக்
கனவின்வந்தநேரியனேகம்பைவளர்சீரியனே. (கசு)

ஆயிரத்தெட்டண்டமெலாமாண்டசூராதியரைக்
காயுமயில்வேலவனேகம்பைவளர்மேலவனே. (கஎ)

விண்ணவர்சேனாபதியோமேவுந்தயாநிதியோ
கண்ணாரமுதமோகம்பைவளர்சீமானே. (கஅ)

செந்திநகர்வாழ்வோதிருப்பரங்குன்றத்துறையுங்
கந்தப்பெருமானேகம்பைவளராதிபனே. (ககூ)

மெய்ப்பிடித்ததேவரன்புமேவுதெய்வயானைதனைக்
கைப்பிடித்தநாயகனேகம்பைவளர்கோமானே. (உ0)

சீராவினன்குடிவாழ்தெள்ளமுதாவெம்முடைய
காராணவப்பகையோகம்பைவளர்சோதியனே. (உக)

திருவேரகமமர்ந்ததேசிகனேதொண்டா
கருவேரகழ்பவனேகம்பைவளர்சிற்குணனே. (உஉ)

குன்றுதோறுங்குணநிதியோவன்பரனுங்
கன்றுகட்குச்சேதாவோகம்பைவளர்புண்ணியனே. (உங)

துன்னும்பழமுதிர்வன்சோலைமலர்த்தேன்பெருக்கோ
கன்னலோகற்கண்டோகம்பைவளர்தெள்ளமுதோ. (உச)

குன்றுக்குடிவாழ்குமரனேபோற்றுநரைக்
கன்றலருள்வடிவோகம்பைவளர்தற்பரனே. (உரு)

சதுர்மாமறைப்பொருளோதண்ணருளோகண்டிக்
கதிர்காமமேயவனேகம்பைவளர்தூயவனே. (உசு)

அண்ணாமலையிலருணகிரிநாதரன்பாய்க்
கண்ணாரக்கண்டவனேகம்பைவளரற்புதனே. (௨௭)

பொதியமலைச்சித்தனுக்குப்புத்திசித்திமுத்திக்
கதியளித்தசித்தனேகம்பைவளர்சிற்பரனே. (௨௮)

உலகமெலாம்போற்றவந்தேயோம்புசங்கத்தார்கள்
கலகமெலாம்போக்கினனேகம்பைவளர்பாக்கியனே. ( )

ஆற்றுப்படைசாத்துமன்புடைநக்கீரருக்குக்
காற்றுணையைநல்கினனேகம்பைவளர்துல்லியனே. (௩௦)

பொல்லாதநோயனைத்தும்போக்குந்தணிகையென்னுங்
கல்லாரபூதரனேகம்பைவளர்காங்கேயனே. (௩௧)

வல்வேடராதரிக்கும்வள்ளிமலைவாழ்வள்ளி
கல்யாணசுந்தரனேகம்பைவளர்சோபனனே. (௩௨)

அந்தமலைவல்லிபங்கராளுங்கயிலைமலைக்
கந்தமலைச்செந்தேனேகம்பைவளர்மாமருந்தோ. (௩௩)

எண்கண்டதேவரைப்போலின்றிக்கலியுகத்திற்
கண்கண்டதெய்வமோகம்பைவளர்தாயகமோ. (௩௪)

ஒளித்துவந்துதாய்கொண்டவூடலறத்தந்தை
களிக்கநகைகூர்பவனேகம்பைவளரோகையனே. (௩௫)

எம்மான்புயமலைமேலேறியிளம்புற்பறித்துக்
கைம்மானுக்கீபவனேகம்பைவளர்விந்தையனே. (௩௬)

அங்கணனார்வேணியரவைவிளையாட்டினங்கைக்
கங்கணமாவேய்பவனேகம்பைவளங்கூர்பவனே. (௩௭)

ஒருகோலங்காணுவொருகோலம்போற்றுங்
கருகூலமானவனேகம்பைவளாவானவனே. (நஅ)

தாக்கும்வினையாலடியார்சஞ்சலித்தாலஞ்சலென்றே
காக்குந்தயாநிதியோகம்பைவளர்மாநிதியோ. (நக)

வினைவறியாப்பேயேன்வினையகலவுள்ளங்
களவுசெய்தகள்வனேகம்பைவளர்வள்ளலோ. (சO)

தத்துவமுப்பத்தாறுந்தாங்கடந்தபேரொளியாங்
சத்தனேநித்தியனேகம்பைவளர்சத்தியனே. (சக)

மணமுமலருமெனமன்னியன்பர்தம்மைக்
கணமுமகலாதவனேகம்பைவளர்மாதவனே. (சஉ)

சுலபமாயன்பரெதிர்தோன்றியருணீலக்
கலபமயில்வாகனனேகம்பைவளாமோகனனே. (சந)

பங்கயப்பூந்தாளானேபன்னிரணடுதோளானே
கங்குல்பகலற்றவனேகம்பைவளருற்றவனே. (சச)

இரும்போவெனுமென்னிதயமுந்தித்திக்குங்
கரும்போசெழும்பாகோகம்பைவளர்செந்தேனே. (சரு)

இனியகழைச்சாறேவிணையில்பசும்பாலோ
கனியோகனிரசமோகம்பைவளர்தெள்ளமுதோ. (சசு)

சுடரோசுடரொளியோசொல்லரியஞானக்
கடலோகருணைவெற்போகம்பைவளரன்பர்வைப்போ. ()

மணகமலமுத்தோவயிரமோவாணிக்
கனகமோசெம்மணியோகம்பைவளர்விண்மணியோ. ()

மெச்சுமன்பர்க்காசுவியன்குமரகோட்டமன்னிக்
கச்சிவரும்பொற்பகமோகம்பைவளர்கற்பகமோ. (சுக)

சீதப்பழகியைப்போற்சீர்ப்பசுமந்தானகர்வாழ்
காதற்பழம்பொருளோகம்பைவளர்நற்றெருளோ. (ரு0)

என்றென்றேதாலாட்டியெல்லோருமின்பமுற
மன்றவருள்செய்வனெங்கண்மாக்கம்பைவாழ்குக்னே. ()

தாலாட்டு முற்றிற்று.

---

# திருப்பள்ளி யெழுச்சி.

சீர்வளர்மாவடிவாழ்கம்பவாணர்
திகழ்கடிமார்பின்வடுவுறச்செய்த
வார்வளர்கும்பமுலைப்பெருமாட்டி
மடிமிசையமருகின்காட்சியைமானப்
பார்வளர்குணதிசைமைக்கடன்முகட்டிற்
பரிதியம்பண்ணவனுதயஞ்செய்தனனு
லேர்வளர்கம்பையுள்வாழ்முருகோனே
யெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே. (க)

ஊழினருந்தவவுத்தமருக்கே
யுதயஞ்செய்கின்பதகுரியன்வரவுன்
கோழியிசைப்பதுகிச்சயமென்னக்
குவலயமீதுகுணதிசைக்குன்றி

ஞாழியொன்றேழ்பரித்தேர்ச் சுடர்வரை
யாவலிற்சேவல்களார்த்தனவையா
வேழிருபுவனமுமொளிர்கம்பைவேளே
யெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே. (௨)

அன்புறுமைபங்கிறிருமுகக்காட்சி
யாதரவார்கண்டுகொண்டவர்க்கெல்லாம்
வன்புறுமாயையொழிந்ததுபோல
வாம்பரியேழுடைதேரவற்கண்டே
முன்புறுவையகமுற்றிருண்மூடு
மொய்யிரவோவியமேவியதொண்ட
ரின்புறுசம்பையுள்வாழ்முருகோனே
யெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே. (௩)

கண்டிசைவத்திருநீறுப்புனைந்துங்
கதிர்முகதரிசனங்காதலிற்பெற்ற
தொண்டிசையன்பர்கள்கட்புனல்சோரத்
தோத்திரப்பாட்டொடுமுகமலர்செயல்போல்
வண்டிசைதேனொடுசெங்கதிர்நோக்கி
வாவிகடோறுமலர்ந்தனகமல
மெண்டிசையோர்புகழ்கம்பையுளோர்தா
யெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே. (௪)

நற்போதவன்பர்கின்பொற்பாதசேவை
நண்ணக்கருவிகரணங்களோய்ந்தே
தற்போதநீங்குவர்தன்மையிற்பொற்றேர்
தன்னின்விபாகரன்சாரவிவ்வுலகி

லற்போதுதாரகையோவினவல்லோ
னல்லோனெனுவொளிதேய்ந்தனனம்மா
வெற்போலொளிர்மதிற்கம்பையுள்வேளே
யெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே. (ரு)

பொங்கரின்மாங்குயில்கூவினமற்றைப்
புட்கள்சிலம்பினவார்த்தனசங்கஞ்
சங்கையின்மத்தளதாளத்தினெங்கு
சதியொடுசரிகமபதநிசகீத
நங்கையர்நின்னருள்வேன்மயிலழகி
னயனம்புரட்டிநடம்புரிகின்று
ரெங்கள்குலதெய்வமேகம்பைவேளே
யெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே. (சு)

புங்கவரந்தரதுந்துபியார்த்தார்
பொன்னரிமாலையுங்கொண்டுநிற்கின்றார்
துங்கமுனிவராராசிசொல்கின்றார்
தும்புருநாரதர்யாழிசைக்கின்றார்
மங்கலவேதியர்மறையொலிக்கின்றார்
வழியடித்தொண்டர்கடுதிபுரிகின்று
ரெங்களும்பேர்பெறுகம்பையுள்வேளே
யெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே. (எ)

கமலவல்லியினொடுகார்வணனொருசார்
கலைமகளுடனன்னவாகனனொருசா
ரிமயவர்சசியொடுமிந்திரனொருசா
ரிலக்கரொடுநவவீரர்களொருசார்

தமதுளமகிழ்வொடுன்றரிசனங்காணச்
சார்ந்தனர்சரவணபவசிவகுருவே
யிமமலர்கர்த்தனஞ்சூழ்கம்மைவேளே
யெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே. (௮)

அருச்சகரன்பினினாகமமுறையே
யபிடேகதிரவியந்திருப்பள்ளித்தாமந்
திருக்கிளர்பூந்துகின்மணிமுடிமுதலாந்
திகழ்பணிசந்தனகுங்குமவாச
மருக்கமழ்தூபமுந்தீபமுமமுது
மகிழ்வொடுகொண்டருச்சிக்கவிழைந்தா
ரிருக்சொலிகுலவியகம்மையுள்வேளே
யெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே. (௯)

அம்மையுமப்பனுமைங்கரமுடைய
வண்ணனுமன்பினணைக்குங்குழந்தாய்
கொம்மைமுலைக்குறமானுமற்றேவ
குஞ்சரியுங்களிகொள்ளுமணாளா
விம்மைமறுமைப்பயனையுநாளு
மேத்துமெய்த்தொண்டர்க்கருளும்பிரானே
யெம்மைக்கண்பார்த்தருள்வான்கம்மைவேளே
யெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே. (௧௦)

திருப்பள்ளியெழுச்சி முற்றிற்று.

---

# பெரியகட்டியம்.



கனகமலைசிகாகளடவதனகணபதிபின்வரு
    கம்பீரசுந்தரசண்முகனே
சனகர்முதன்முனிவர்தமயலகலவருள்பரமர்
    தங்காதிலின்சொலுரைசுகனே
யனகவிமகிரிகுமரிகவுரிமடிமிசைமிகவு
    மன்பாயமர்ந்துவளர்மகனே
தினகரனதுடல்குளிரசிழலுதவுபொழிலிலவு
    சிங்காரயம்பைவளர்குகனே. (க)

உரைசெயறுசமயமுமெயுடையவொருகடவுளென
    வுந்தாசைகொண்டுபணிபாதா
வரைசெயிடாகழியவொருநொடியிலயில்விடுபரம
    மைந்தாசெழுஞ்சுருதிகீதா
விரைசெய்குரவணிபனிருபுயசயிலமருவிசிதம்
    விஞ்சார்வரஞ்சிதவிநோதா
திரைசெய்கடலுலகிலொருசகருசிகரிலையெனுமொர்
    சிங்காரகும்பைவளர்நாதா. (உ)

புனலுவரிநுசர்பொதியமலைமுனிவர்முழுகவருள்
    பொங்காழிதந்தகுருராயா
வனகலபமயிலின்மிசையுலகையொருநொடியில்வலம்
    வந்தாயெனும்புகழ்கோயோ

வினலகலமுருகவெனநினையடியருறையுமிட
மெங்கேனுமங்குவருநேயா
சினகரசிகரிககனமுகடளவவமரர்துதி
சிங்காரகம்பைவளர்சேயா. (கூ)

படகரியபிழைசெயினுமுனியலெனவுலசுதரு
பங்கேருகன்பரவுவிதியே
மிகழ்விலடியர்கள்வறுமையிடரகலநினைவின்வண
மிங்கேயுவந்தருளுநிதியே
யகரநிகரெனவொளிருநினையடையுநெறியுடைய
ரங்கேமகிழ்ந்துபெறுகதியே
சிகரபுளகிதகளபமுலைமகளிர்பரவுமிடு
சிங்காரகம்பைவளர்பதியே. (ச)

பணிகளதுகுலமுழுதுமுகளபதசுநுதிகொள்
பைங்கோதகையஞ்சிகியிலமேலா
தணிவினசைவொடுகடியகொடுமைபலபுரியசுர
சங்காரவங்கைவடிவேலா
வணிககனமிசையுலவியுடலைநுகர்பொரியினனை
யஞ்சேவலங்கொடிவிசாலா
திணிகன்மனமுடையவருமுருகுமனமொடுதுதிசெய்
சிங்காரகம்பைவளர்பாலா. (ரு)

மனமுருகமுருகவெனுமமரர்தமதுலகினிடை
மங்காவளம்பெறவைதிருவே
மினிதுசுரபதியுதவுவனிதைசுரகரியையமிகு
மின்பாய்மணந்தமலர்மருவே

யனநடையுமமுதமதிமுகமுமுடைகுறவர்கொடி
யன்பாயணைந்துபடர்தருவே
தினமும்விழவயர்மறுகினராவிபுதரொடுவிரவு
சிங்காரகம்பைவளர்குருவே. (௬)

உகளவெழுபுவனமுழுமையுமுலவிவருபொர்நவ
வுங்காரர்முன்புவருவோனே
சகலவுயிர்களினுளுயிருணர்வுளுணர்வெனவினிது
தங்காதியந்தமில்பிரானே
குககுமரகுருமுருகவெனவுருகியடியவர்கள்
கொண்டாடநின்றபெருமானே
திசழ்கழனியுழுதுழவர்பயிர்செய்வளமலியொலிகொள்
சிங்காரகம்பைவளர்கோனே. (௭)

அரியயன்விணவரதிபனமரர்வரபயமென
வஞ்சேலெனுங்கருணைவரனே
விரியுவரிவறுமையுறநுகர்பெரியவயிறுடைய
வெம்பூதர்விஞ்சியகுமரனே
வருகுருகுமலையினொடுபொருதுபலகொடுமைபுரி
வன்சூரகன்றனைவெலுரனே
திருமகளுமினியகலைமகளுமனமகிழ்வினுறை
சிங்காரகம்பைவளர்பரனே. (௮)

திகழருணைபுகழ்மயிலையுயர்பழநிகிளர்பொதியமு
செந்தூர்விளங்குமுபகாரா
மகிழ்கதிரைதமிழ்மதுரைமிளிர்கமலைநடனமிடு
மன்றோரகங்குலவுதாரா

ஈதுகயிலைமலைசமரபுரியினியதணிகைமலை
நன்காஞ்சியம்பதிகுமாரா
செசவணிதைமுசகமலநிகாமகிளமதலவுநன
சிங்காரகம்பைவளர்வீரா. (௯)

உருவெனவுமருவெனவுமுருவருவமெனவுமறை
யொன்றுவுணர்ந்துதொடாமூலா
மருவுமிருவினைதுலையினுறுமெயடியரைவலிய
வந்தேசலர்தவநுகூலா.
கருணைபுரிமுருகனெனவரிதிருவிலுடனினிது
கண்டோகைகொண்டுபுகழ்சோலா
தெருவுதொறுமணிமணிகளகிலினுடுதுகளொடளை
சிங்காரகம்பைவளர்சீலா. (௧௦)

பெரியகட்டியமுற்றிற்று.

---

## சின்னகட்டியம்.

ஐந்துகரமுன்பஞெடுபின்னே
யன்பின்வருதுங்கமிகுமன்னே
கந்தகிரிபின்கணுறைபொன்னே
கம்பைவளரெங்களருளன்னே. (௧)

உம்பருயவந்தவருளுருவே
யொங்குலகமெங்குமலர்மருவே
கம்பர்மகிழும்பரணவகுருவே
கம்பைவளரெங்கள்சுகதருவே. (௨)

விஞ்சுதுயரங்களையுதீதா
வெங்குறவர்பைங்கொடிவிநோதா
கஞ்சனைமுனிந்தசதுர்வேதா
கம்பைவளரெங்கள்குருநாதா. (௩)

தொண்டர்பணிதண்டையணிகாலா
சுந்தரியெனுங்கவுரிபாலா
கண்டகரைவென்றவடிவேலா
கம்பைவளரெங்கள்குணசீலா. (௪)

அங்கணரிருங்கயிலைவாசா
பங்கணிகையின்கணுறைநேசா
கங்குல்பகலின்றொளிர்விலாசா
கம்பைவளரெங்கண்முருகேசா. (௫)

செந்தினகர்வந்தமருசித்தா
தென்பழநியின்கணுயர்சித்தா
கந்தருவர்நின்றுபுகழத்தா
கம்பைவளரெங்கள்குலகத்தா. (௬)

இம்பரின்விளங்குபசுமந்தா
னென்றொளிர்தலங்குலவுசிந்தா
கம்பரவுமின்புதவுகந்தா
கம்பைவளரெங்களருண்மைந்தா. (௭)

நண்பரிடையென்றும்வருவோனே
நன்றுநினையின்புதருவானே
கண்பனிருகொண்டமுருகோனே
கம்பைவளரெங்கள்பெருமானே. (௮)

குஞ்சரியெனும்பெண்மணவாளா
குங்குமகதம்பமணிதோளா
கஞ்சிநகரின்புறகுளா
கம்பைவளரெங்களருளாளா (க)

துங்கநடையஞ்சிகியின்வையா
தொண்டைர்மகிழ்கொண்டுதுதிமெய்யா
கங்குல்பகலுந்தயைசெய்துய்யா
கம்பைவளரெங்களருளையா. (கO)

சின்னகட்டியம் முற்றிற்று.

## குயிற்பத்து.

சீதமலர்ப்பொழின்மாமரந்தன்னிற்
சிறப்பினமர்ந்துலகோர்மகிழக்
கீதமிசைக்குநற்கோகிலமேயொன்று
கேண்மையிற்சொல்லுவன்கேட்குதியால்
பூதலமீதலமுற்றவர்மற்றவர்
போற்றுங்கம்பாபுரியாறுமு
காதனைநங்கள்பிரானைக்குகேசனை
நண்புடனேவரக்கூவாயே. (க)

வேடையகற்றுமலர்ப்பொழிலீதென்று
மேவினருள்ளக்குளிர்ச்சியுறக்
கோடையங்காலத்தினியகருதி
குலாவவிசைத்திடுமாங்குயிலே

யோடையந்தாமரைவண்டுணத்தேன்பொழிற்
 றோங்குந்திருவயிராவதிநன்
னுடையனைக்கம்பைவாழ்முருகேசனை
 நாடியன்பாய்வரக்கூவாயே. (உ)

அற்புதநின்குரல்வெம்மையென்றேதுவ
 ரன்புமணவற்பிரிந்தமின்னார்
பற்பலவும்பின்னுமேசுவர்நீயப்
 பழியுமகன்றயிதிகோகிலமே
கற்புளமங்கையர்மங்கலவாழ்த்துக்
 கலிக்குநற்கம்பையுள்வாழ்கருணைச்
சிற்பரஞானசுகோதயபானுவைத்
 தேர்ந்தினிதாய்வரக்கூவாயே. (ஙு)

பெற்றவொர்தாயும்வளர்த்தவொர்தாயும்
 பிரியமிலாதுணைப்போக்கினர்மேன்
மற்றுமென்சொல்வதுகுற்றமில்கீதம்
 வழங்கிப்பொழிலுறைமாங்குயிலே
யற்றவர்க்கற்றதுணைபுரிவோமென
 வற்புதகம்பையமர்ந்தருளுங்
கொற்றவைவேலனைத்தற்பரைபாலனைக்
 கூர்ந்தினிதாய்வரக்கூவாயே. (ச)

முருககுமாரகுகேசவென்றன்பின்
 மொழியவல்லார்கடமுன்னணுகித்
தருகவென்றேதுமுனெண்ணும்வரங்க
 டழைக்கவருளுவன்மாங்குயிலே

யுருகடியார்புடைசூழ்கம்பைவாசனை
யொப்புவமையற்றவுத்தமனைப்
பெருகருளாளனைவள்ளிமணாளனைப்
பெட்புடனேவரக்கூவாயே. (௫)

காணிக்கடலுலகத்திற்பிறந்தென்னை
கண்டனம்விண்டனம்வீண்வார்த்தை
பேணிக்கருணைபுரிந்துவளர்க்கும்
பிராணிவனல்லதுவேறில்லையா
லாணிக்கனகதின்மணிக்கோபுர
வற்புதகம்பைநகருறையு
மாணிக்கவண்ணனைப்பன்னிருகண்ணனை
மாங்குயிலேவரக்கூவாயே. (௬)

ஏமனைக்காலினுதைத்தருளீச
னெரியனத்தினுருவிலியாங்
காமனைக்காகளமாகமுழங்கிக்
களிப்பிக்கக்கற்றனை கண்டதென்னே
மாமனைக்காதலிற்பொன்னுலகாள
வழங்கியவள்ளலைக்கம்பையுள்வாழ்
சேமனைக்கார்த்திகைபாலுண்டவாயனைச்
சீர்க்குயிலேவரக்கூவாயே. (௭)

அன்புருவாகியகங்குழைவார்க
ளழைக்குமிடத்திலடைந்தருளி
யென்புதல்வாவினைக்கென்விழைவென்றுங்
இணைமலர்ச்சேவடிதந்தருளு

மின்புருவாகிபகட்டைக்குகேசனை
யென்னென்றுபாடுதுங்தேடரிய
மன்புரணுனந்தசண்முகசாமியை
மாங்குயிலேவரக்கூவாயே. (௮)

சானகபின்மீதுறைந்தத்துவமீதுஞ்செய்
தாண்டவனையெனதாண்டவனைப்
பாகெனுஞ்செந்தமிழ்ப்பாவலருக்கருள்
டாவலனைக்கொடிச்சேவலனை
நாகர்தருந்தெய்வயானைக்கும்வள்ளிக்கு
நாயகனையுயிர்த்தாயகனை
மாகம்பைநம்பியையைங்கரன்றம்பியை
மாங் யிலேவரக்கூவாயே. (௯)

பிறப்பிறப்பென்னும்பெருந்துயர்தீர்த்துநற்
பேரின்பமுத்தியளிப்பவனை
பறப்பெருஞ்செல்வியுமேகம்பவாணனு
மாகத்தணைக்கக்களிப்பவனை
யுறப்பெறும்வண்குமரன்கோட்டமாதி
யுளதலமெங்குந்தளிர்ப்பவனைச்
சிறப்புறுங்கம்பையுள்வாழ்குருநாதனைச்
சீர்க்குயிலேவரக்கூவாயே. (௧0)

குயிற்பத்து முற்றிற்று.

# கிளிப்பத்து.



உமையவள்கரமலரின்சுகமா
யுருவுகொடுமறைதருநங்குகவே
ஏமைவுறுபுகழ்தனையன்புடனே
யறைதரினின்புகழென்சொலுகே
யிமையவரனுதினமின்பமொடே
யிலகுசதருபுகழ்நிறைகம்பையுள்வாழ்
குமரனைமயிலிவர்மைந்தனையே
குதுகலமொடுதுதிபைங்கிளியே. (௧)

மனமகிழ்புனமதிலொண்கிளியா
மரபுறவுரைதருவண்கிளியா
மனநடையுடையிடைமின்றனையே
யனையுமெய்மகிழ்வெனநின்றனையே
நினைவினளருளுமொர்தன்புடையே
நினையெவர்நிகர்வர்மணின்புடையே
பனவர்கடுதிபுரிகம்பையுள்வாழ்
பதிமுருகனைமொழிபைங்கிளியே. (௨)

பொருதிரையறநிறைதண்கடலே
புவிமுழுதினுமொளிர்திண்கிரியே
கருமலவிருடெறுசெங்கதிரே
கமைபெறுசுதைபொழியொண்கலையே

யருளெனுமழைசொரிநன்புயலே
யடியர்மகிழ்விளையும்பயனே
யிருநிலமதுபுகழ்கம்பையுளா
யெனமொழியழகியபைங்கிளியே. (௩)

லகலைபுகழ்முதலைங்கரனார்
பரிவொடுதழுவுமொர்நன்றுணையே
யுலகருளியவருளம்பிகைமா
துளமகிழ்கருணையிலஞ்சியமே
பலகறுபெருமைகொள்சங்கரனு
ரவிர்புயமுலவுமிளங்களிறே
யிலகறன்வளர்கனகம்பையுளா
யெனமொழியழகியபைங்கிளியே. (௪)

செனனமரணமெனும்வெந்துயரே
செறிதருமுடலிதுகண்டனையே
தனமெனவிதனையுநம்புவதோ
சரியலவுயுநெறியொன்றுளதா
லனவரதமுமொளிர்கம்பையுளே
யருள்பொழிகுருவடிவங்கொடுவா
ழெனதருநிதிமுருகன்பெயரே
யிசையிதுசிச்வுரைபைங்கிளியே. (௫)

சரவணபவசிவசுந்தரனே
சதுமறைமுடியின்வரும்பதனே
சுரகரிமருவுநன்மங்கலனே
சுரர்முனிவரர்துதிபுக்கவனே

நரகரிமருகனெனுங்குகனை
நறைகமழ்குரவணியும்புயனை
யிரவலர்நிதிபெறுகம்பையுளா
யெனநயமொடுபகர்பைங்கிளியே. (௬)

அவனவளதுவெனநின்றவன்யா
ருருவருவருவுருவென்பவன்யா
நவநிலைமிசையினிருந்தவன்யார்
நவிலருபெருமையுகந்தவன்யார்
தவசிகளறிவுகலந்தவன்யார்
சரணர்களெதிரெளிவர்தவன்யா
ரிவனெவர்களுமறிபூ ர்பையுள்வே
லிறையெனவறையுதிபைங்கிளியே. (௭)

குவடதிர்நடமிடுசெஞ்சிகியே
கொடுவினையசுரரைநுங்கயிலே
பவவிருள்கெடவொலிபண்கொடியே
பரிமளகுசுமகதம்பமதே
வுவகையொடமரர்தரும்பிடியே
யுயர்திணைவனமுலவும்பிணையே
யிவையறிகுறியொடுகம்பையுள்வா
ழிறைபெயரறையுதிபைங்கிளியே. (௮)

அமரர்களுறைதருவின்பதமோ
''வலரணைவதிகிழவன்பதமோ
கமழ்துளவணிகரியன்பதமோ
கலைமதிபுனைபரமன்பதமோ

யுமதுளமெதுநசையென்பதமோ
வுதவுவனெனவொளிர்கம்பையுள்வே
ளெமதருளிறைமுருகன்பெயரே
யினிமையினறையுதிபைங்கிளியே. (௯)

உளநிலைமகிழ்வொடிருந்திடவே
யுதவுவனிருபதபஞ்சரமே
தளர்வுறுபசியறவன்புடனே
தருகுவனருளொளுநன்கனியே
யளவிலையவனருளின்பமதே
யழகியபொழில்வளர்கம்பையுள்வா
ழிளையவனிருகிளிதம்பதியே
யெனையருள்கெனமொழிபைங்கிளியே. (௧௦)

கிளிப்பத்து முற்றிற்று.

# வண்டுவிடுதூது.

வானேமுதலுலகம்வாழ்த்துமெழிற்கம்பைமுரு
கோனேமயிலிற்குலாவுமுலாக்கண்டுவந்தேன்
யானேழையென்செய்கேன்யாவர்துணைசெய்குவர்பூந்
தேனேபோயென்னுடையசெய்திசொல்லிவாராயே. (௧)

தொண்டேசெயன்பர்சுகமடையுங்கம்பைவளர் [ர்
தண்டேந்துங்கைத்தலத்தெஞ்சண்முகனைக்கண்டபின்ன
பண்டேயெரித்தமதன்பண்ணுங்கலகமெல்லாம்
வண்டேபோய்ச்சற்றேமகிழ்ந்துரைத்துவாராயே. (௨)

அமரேசன்றேவரொடமெர்ச்சனைசெய்கம்பைவளர்
குமரேசவென்றூற்குறிஞ்சிக்கிழவனென்றே
சமரேசெய்கின்றவர்போற்றுதியரும்பேசுகின்றூர்
ஞூமிறேபோய்ச்சற்றேகிளையுரைத்துவாராயே. (௩)

ஒளியேய்பசும்பொன்மதிலோங்குமெழிற்கம்பையுள்வே
ளெளியேற்கெளியேனென்றென்னைமயல்செய்தகன்றூன்
றளியேனுமன்பிலேயோதூயவருட்பேர்படைத்த
வளியேபோயென்னுடையவாசைசொல்லிவாராயே. (௪)

மறுபதமெண்ணுவுவகைவர்தருளிக்கம்பைநக
ருறுபதமாவாழ்தகனுக்குண்மையுரைப்பவர்யார்
பெறுபதத்தின்மிக்கசிறைப்பெரிசையுமன்புமுள
வறுபதமேசீயேகாணன்பினிற்போய்வாராயே. (௫)

கள்ளேபொழியுமலர்க்காவனிந்தகம்பைநக
ருள்ளேமூனைத்தமூன்னாண்குற்றகண்வேழங்கலந்தாற்
கொள்ளேமதன்விற்கொடுந்துயரங்கண்டுகரும்
புள்ளேபோயெந்தன்புரிவுரைத்துவாராயே. (௬)

காத்தும்பிரியமுடன்கைவிடேமென்றுகம்பைக்
கேத்தும்பிரானையெனக்கின்பமயறந்தானை
மாத்தும்பிவத்திரன்றன்வண்டுனையையென்றுணையாய்க்
கோத்தும்பிசற்றேபோய்க்கூர்ந்துரைததுவாராயே. (௭)

முதுகாகத்தூற்றமுனிமுன்வணங்குங்கம்பையுட்போய்ப்
புதுகரமீயாழிமென்கால்போழ்கரத்தையோரிரண்டார்
பதுகரஞ்சோராறுமுகப்பண்ணவற்கூநன்குசொல்லி
மதுகரமேயென்பான்மகிழ்ச்சிகொண்டுவாராயே. (௮)

இரும்பேய்மனத்தினருமேத்துகம்பைவேண்மயலாற்
றரும்பேகிகரிளைத்தேன்சோர்ந்தகுழல்சோர்ந்தவளை
கரும்பேயமுதேபோற்கானஞ்செய்ஞானமுள்ள
சுரும்பேநீபோயெனதுசொல்லுரைத்துவாராயே. (௯)

காவேசூழ்சிங்காரக்கம்பைநகருறையுங்
கோவேலிறையென்குறைதவிர்க்கப்போந்திடிற்பொற்
பூவேயவன்றுட்புகுவிப்பானின்னையுந்தான்
மாவேநீவாழியென்றன்மையல்சொல்லிவாராயே. (௧௦)

வண்டுவிடுதூது முற்றிற்று.

---

## எச்சரிக்கை.

அகிலாண்டமும்புகழ்பூண்டவெனப்பாவரிமருகா
மூகிலாண்டபொன்மதில்சூழ்கம்பைமுருகாவெசசரிக்கை.

வரைராசன்கண்மணியாய்வந்தமாதம்பிகைபாலா
விரைசேர்மலர்ப்பொழில்சூழ்கம்பைவேலாவெச்சரிக்கை.

சனகாதியர்க்குபதேசித்ததந்தைக்குபதேசா
வெனையாள்கம்பைநகர்வாழ்குமரேசாவெச்சரிக்கை. (௩)

உலகம்வலஞ்செய்தோயருளுடையோயறுமுகனே
குலவும்புகழ்கம்பாபுரகுகனேயெச்சரிக்கை. (௪)

தாயாயன்பர்க்கருள்கிண்கிணித்தாளாவருளாளா
தூயாகம்பைவளர்பன்னிருதோளாவெச்சரிக்கை. (௫)

மணிகண்டர் தஞ்சடைமேல்வளர்மந்தாகினிமைந்தா
கணிகொண்டொளிர்கம்பாபுரகந்தாவெச்சரிக்கை. (சு)

கும்பாரியன்றன்றேசிககுறிஞ்சிநிலவேந்தா
கம்பாபுரவாழ்வேவள்ளிகாந்தாவெச்சரிக்கை. (எ)

சுரவாரணிமணவாவருள்சுரக்குஞ்சுரதருவே
திரள்சீர்வளர்கம்பாபுரித்திருவேயெச்சரிக்கை. (அ)

கண்ணேகண்ணுண் மணியேயென்றன் கருத்தேயுயா
கதியே, பண்ணேபண்ணின் பயனேகம்பைப் பதியேயெ
ச்சரிக்கை. (கூ)

கனமாமணிமலையேயருட்கடலேகதிரொளியே
யனவாகனன்பணிகம்பையுளளியேயெச்சரிக்கை. (கO)

சார்ந்தார்வினைதீர்ந்தேத்திடத்தயைசெய்தொளிர்சாந்தா
தேர்ந்தார்புகழ்கம்பாபுரிச்சேந்தாவெச்சரிக்கை. (கக)

காலாயுததுவசாவயிற்கரனேயெங்கள்கோவே
சீலாகரகம்பாபுரதேவேயெச்சரிக்கை. (கஉ)

எச்சரிக்கை முற்றிற்று.

---

# வண்ணத்தாழிசை.



அருளேபொழிமலர்மாமுகவழகும்விழியழகு
மணிவெண்பொடியழகுஞ்செவியழகுங்குழையழகுந்
தெருண்மாமறைமுடிவோதியசெவ்வாய்நகையழகுந்
திகழங்கதமணிபன்னிருசிகரப்புயவழகுங்
குருமார்பழகுங்கிண்கிணிகுலவுஞ்சரணழகுங்
கொடிவேன்மயிலழகும்பிடிகுறமங்கையினழகுங்
கருதேழையிவ்வடியேனவைகாணத்தயைபுரிவாய்
கம்பாபுரியன்பாயுறைகந்தப்பெருமாளே. (௧)

அரிதாகியநரசன்மமடைந்தேனதைவீணே
யழுதைக்கமருக்குட்பெயுமறிவற்றவனேபோல்
விரிதாரணிமிசையாசையின்விட்டேன்மதிகெட்டேன்
வினையோநினதருளோவிதுவெறியேனறிவேனோ
பரிதாபமிதாரேபடுகிற்பாரெனதப்பா
பைந்தோகையில்வாராயருள்பாராய்துயர்தீராய்
கரிதாவுறுபரிதேர்மிடைகதிர்மாமணிமறுகார்
கம்பாபுரியன்பாயுறைகந்தப்பெருமாளே. (௨)

செகமீதினில்வருமானுடசென்மத்தவரெல்லாஞ்
செய்யுந்தொழிலுய்யுந்தொழில்சிறியேன்புரிதொழிலோ
மிகவாசையினையுந்தொழில்வெம்பாதகமெல்லாம்
வினையுந்தொழிலாமாலிதுவிதியோகெடுமதியோ

மகமாயையொழிக்குந்தொழில்வல்லாயெனைநின்றாள்
வாழ்த்துந்தொழிலுடையாரைவணங்குந்தொழிலருளா
சுகனுதிபனிமையோர்வரர்கரியோன்விதிதுதிசேர் [ய்
கம்பாபுரியன்பாயுறைகந்தப்பெருமாளே. (ங)

மானூர்நினகழலெண்ணிலர்மனமேசுடுவனமே
வாழ்த்தித்துதிசெய்யாதவர்வாயேயெழுநீயே
தாணுவவலஞ்செய்கிலர்சரணேமிகுமுரணே
தடுசீரொடுபணியாதவர்சடமேயொருமுடமே
சேணூர்வின்வணங்காதவர்சிரமேநெடுமரமே
தினநின்புகழ்கேளாதவர்செவியேநகசெவியே
காணுதவர்கண்ணேயிருபுண்ணேகழறென்னே
கம்பாபுரியன்பாயுறைகந்தப்பெருமாளே. (ச)

வெந்தானவர்வெந்தோடவிடுத்தாய்கதிரவடிவேல்
வினையேன்வினைவிட்டோடவொர்விதநீசெயவரிதோ
எந்தாயெனநினைநம்புமிவ்வேழைக்கிதுசெய்தா
லிகழ்வோமுறையலவோவினியாரைச்சரணடைகேன்
சிந்தாமணியேயண்டர்கள்சேனாபதியேமெய்த்
திருவாளர்கடினமின்பொருதேநேதிரவியமே
கந்தாவியவண்கோபுரகனகத்திருமதில்சூழ்
கம்பாபுரியன்பாயுறைகந்தப்பெருமாளே. (ரு)

ஆற்றேனினியாற்றேனிடரந்தோவடிநாயே
னஞ்சேலெனவந்தேநினசெஞ்சேவடியருளாய் [ம்
போற்றேன்பிறர்தமையேயொருபொருளென்றனுவேனு
புதிதன்றிதுபழயேங்கள்பொருந்தும்பெருநோன்பா

கோற்றேகலைமகளின்னைமுறுதிவேலவினருளா
ஞுவலுங்கலைபெறவுற்றெனநோன்பொய்கையிஞெற்றை
காற்றேமலர்களினத்தொளிர்கடவுண்ணதியனமார் [க்
கம்பாபுரியன்பாயுறைகந்தப்பெருமாளே. (௬)

வல்லார்புகழ்கயிலைத்திருமலைமேலிமமலைமான்
மருவும்பரசிவஞொரனமதவெண்கரிமிசையெந்
நல்லாய்சுரவேழத்தொடுநண்ணுந்தரிசனமென்
னாளிற்பெறுவேனின்னிருதாளுக்கபயங்கா
ணில்லாதவரென்றண்மியவெளியோர்முகநோக்கி
யிலனென்னுமொரெவ்வஞ்சொலவில்லாதுதவுஞ்சீர்
கல்யாணநெடும்பேரிகைகடலோதையின்மிக்குங்
கம்பாபுரியன்பாயுறைகந்தப்பெருமாளே. (௭)

அசைவுற்றிடுமிடைவன்கொடியதனிற்பலமுறவே
யாற்றுக்குழிமடியின்படியசையாதெனையேற்றிக்
குசவெற்பிடைநயனக்கணைகொடுதுன்புசெய்நமனிற்
கொடியார்கையின்விடுவித்தருள்கூர்கண்கொடுநோக்கா
திசையெட்டினுமிசைபெற்றிடுசேயேயருளமுதே [ய்
தெய்வத்திருமணியேமிகுசெல்வப்பெருநிதியே
கசடற்றமெய்ஞ்ஞானத்தவர்காணப்பெறுகதிரே
கம்பாபுரியன்பாயுறைகந்தப்பெருமாளே. (௮)

உள்ளும்புறனும்பற்றறவோர்க்கும்பெரியோர்த
முயிருக்குயிருணர்வுக்குணர்வொருநீயிருவினையேன்
றள்ளூற்றவொருசட்கிணைசகமுங்ககனமுமே
தாவித்துயர்படவர்த்திடுசனனத்தொடுமரணங்

கொள்ளுஞ்செயனன்றேதிலேகொள்ளும்வகைசெய்துட்
கூடுந்தினமென்றேவிளையாடுங்குமரேசா
கள்ளுண்டளிபாடுங்குளிர்காவின்மயிலாடுங்
கம்பாபுரியன்பாயுறைகந்தப்பெருமாளே. (௯)

வனசக்கிழவன்பேசருமறைமூலமெடுத்தே
மணிகண்டபிதாவின்செவிமகிழக்குளிர்மொழியாற்
சொனசற்குருமணியாகியசுதனேநினசெவியிற்
சுதனென்றுயர்மொழிகொள்ளுதிசுடுமென்றுவெறுக்
பனசக்கனிமதுரச்சுளைபரிவிற்சொடுகடுவன் [கேல்
பைந்தேனொடுகுருளைக்குறுபசிதீரவளிக்குங்
கனசத்திரநிழலம்பொழில்ககனத்தளவெழில்சூழ்
கம்பாபுரியன்பாயுறைகந்தப்பெருயாளே. (௧௦)

வண்ணத்தாழிசை முற்றிற்று.

---

## ஊசல்.

அருணன்வலம்வருங்கனகமேருவெற்பை
யரிதுகுடைந்ததுபோலவழகுவாய்ந்த
கிரணமணிமண்டபத்துட்பவளக்கான்மேற்
கிளர்வயிரவிட்டமும்பொன்வடமும்பூட்டி
வருணமரகதத்தமைத்தபலகைமீது
வதிந்தருளியரம்பையர்கள்பாடியாட்டக்
கருணைபொழிசண்முகரேயாடீரூசல்
கம்பைநகர்நாயகரேயாடீரூசல். (௧)

சுந்தரநல்லருள்வதனமதியம்பூப்பச்
சுரோத்திரகுண்டலதபனனசையவந்தச்
சந்திரசூரியர்கரங்கள்போலமார்பிற்
றண்முத்துமாலைமணிமாலையாடச்
செந்தளிர்க்கைமாணிக்கக்கடகமாடத்
திருவடியினரதனப்பொற்சிலம்புமாடக்
கந்தகதம்பாரமணிமகுடமின்னக்
கம்பைநகர்நாயகரேயாடீரூசல். (உ)

பெற்றெடுத்தகாமக்கணம்மையாரும்
பெட்பின்வருகங்கைபெனுமன்னையாரு
முற்றவருளேகம்பத்தந்தையாரு
மோங்குகணபதியாயதமையனாரு
நற்றவனிலூடனுதித்தவிலக்கரோடு
நவவீரர்தம்பியருமுவந்துநோக்கக்
கற்றகவிநாவலர்கள்புகழ்ந்துபாடக்
கம்பைநகர்நாயகரேயாடீரூசல். (௩)

பருதியைக்கண்டலர்செந்தாமரையைப்போலும்
பங்கயக்கண்மாதுலன்கண்டுவகைபூப்பச்
சுருதியின்மூலம்பகர்கென்றனையேகுட்டித்
தாய்மைசெய்தமைத்துனனென்றயன்கைகூப்ப
வருதிரென்றெந்தமைவலியவந்தாட்கொண்ட
வள்ளலென்றுமெய்யடியாருருகியேத்தக்
கருதினியவரங்களெல்லாங்களிப்பினல்கும்
கம்பைநகர்நாயகரேயாடீரூசல். (௪)

சோமசூரியரிருபாற்கவரிசாய்ப்பத்
தும்புருநாரதரினியயாழ்வாசிக்கக்
கோமகன்வேத்திரங்கொடுகட்டியங்கள்கூறக்
குளிர்பனிநீர்கொண்டுவெருணன்தெளிப்ப
மாமருத்துகுங்குலியப்புகையெழுப்ப
வந்தளகையாளியன்பினடைப்பையேந்தக்
காமனுளமகிழ்ந்துபடியகஞ்சுமக்கக்
கம்பைநகர்நாயகரேயாடீருசல். (ரு)

பூமருவுமாமியன்பினேக்கிவாழ்த்தப்
புனிதமுற்றுகலைமகளும்புகழ்ந்துவாழ்த்தக்
கோமருவுபுலோமசையுமகிழ்ந்துவாழ்த்தக்
குதுகலமாயிரதியுங்கைக்கூப்பிவாழ்த்தத்
தூமுனிவர்பன்னியரும்போற்றிவாழ்த்தச்
சுரமடந்தைமார்கண்மிகச்சூழ்ந்துவாழ்த்தக்
காமருவுகிளிபாடப்பூவைகேட்குங்
கம்பைநகர்நாயகரேயாடீருசல். (சு)

பூதகணநாதர்கள்குற்றேவல்செய்யப்
புங்கவர்கள்கற்பகப்பூமாரிபெய்ய
மாதவர்களருகினிருந்தாசிகூற
மகிழ்வினுடனந்தணர்கள்வேதமோத
நாதசுரசங்கீதமேளமார்க்க
நவையகலநல்லறங்கணுளுமோங்கக்
காதல்வழித்தொண்டரின்பக்கடலின்மூழ்கக்
கம்பைநகர்நாயகரேயாடீருசல். (எ)

அண்டர்பதியன்புடனேயீந்ததெய்வ
யானையும்வேடுவர்வளர்த்தவள்ளிமானுங்
கொண்டவுவகையிஞேடுநோக்கிநோக்கிக்
குளிர்ந்துவிழிகொட்டாமற்பாங்கர்நிற்பக்
குண்டலமோர்பன்னிரண்டுங்கதிர்கள்போலக்
குலவமகமேருவெனநடுவேவைகிக்
கண்டவர்கண்மனங்களிக்கக்காட்சிநல்குங்
கம்பைநகர்நாயகரேயாடிருசல். (அ)

பனவசிகாவலர்சாமகானம்பாடப்
பாராளுமன்னவர்களினிதுகூடத்
தனவசியவுத்தமர்கண்மகிழ்வுநீடத்
தகமையுறுகாராளர்முதலோர்நாட
வனவசியநடைமின்ஞர்நடனமாட
வன்பர்குழாமானந்தக்கூத்துமாடக்
கனவளஞ்சேருலகமெலாமிகக்கொண்டாடக்
கம்பைநகர்நாயகரேயாடிருசல். (கூ)

மெச்சுமுமாபதிசுதரேயாடிருசல்
வேலேந்துங்கரதலரேயாடிருசல்
பச்சைமயில்வாகனரேயாடிருசல்
பகலழைக்குங்கொடியினரேயாடிருச
லிச்சைவள்ளிமோகன்ரேயாடிருச
லிபமின்மகிழ்சுந்தரரேயாடிருசல்
கச்சிவளர்சீர்க்குமரகோட்டமென்னுங்
கம்பைநகர்நாயகரேயாடிருசல். (கo)

ஊசல் முற்றிற்று.

## பெருங்கழிநெடில்விருத்தம்.

சுருதிதொடர்ந்துதொடர்ந்தின்னுஞ்
சொல்லற்கரியவெங்கோனின்
சொரூபமெளியேன்சொல்வதெவன்
சோதிவதனத்தாமரையும்
பெருகுங்கருணைச்செந்தேனும்
பிறங்குங்கயனவரிவண்டும்
பேசுங்கனிவாய்நகைமுத்தும்
பெய்யுஞ்செவியிற்குழைக்கதிரு
மருமென்கடம்புமலர்மலையு
மார்பின்மணிப்பொற்கான்யாறு
மருங்கிணையணியுங்கலையலையும்
வழுத்துஞ்சரணநற்றுகிரும்
கருதற்கினியசிலம்பொலியுங்
கயவல்லிகளாமமுதுமொளிர்
கடவுட்கடலேயுனையடைந்தேன்
கம்பைமுருகப்பெருமானே. (க)

வேதமோதுமுறைமையிலேன்
வியனுகமமும்படித்தறியேன்
மேவும்பொருளைக்கனக்தெளிவேன்
விதியும்விலக்குந்தெரிவேனோ

வோதியுணர்ந்தபெரியோரை
யுற்றுமறியேன்குற்றேவ
லுஞற்றியறியேனெவ்வாறே
யுன்றுளடைவேன்சிறியேனே
பேதவாதர்க்கெட்டரிய
பெரியபொருளேமறைமுடியிற்
பிறங்கும்பதியேபேரன்பு
பெருகியுருகிமனங்குழையுங்
காதல்வெள்ளம்படிந்தோர்கள்
காணுஞானத்திருமலையே
கருணைபழுத்தகற்பகமே
கம்பைமுருகப்பெருமாளே. (உ)

சென்றபிறவிதொறும்புல்லோ
செடியோமரமோவன்கல்லோ
சிறியபுழுவோநீர்மேய
செந்துவோபுள்ளோவிலங்கோ
வன்றியெதுவோவறியகிலே
னந்தோவடியேனிப்பிறப்பி
லரியமனிதனெனப்போந்தே
னவலம்புரியாதெனையாளாய்
மன்றுளாடும்பெருமான்கண்
மணியேமலைமான்றருமுத்தே
வனசன்றுதிக்குமொருநிதியே
மகவன்வணங்கும்வச்சிரமே

கன்றுகுணிலாக்கனியுகுத்த
கண்ணன்விரும்புமரகதமே
கற்றோர்மகிழுமரும்பொருளே
கம்பைமுருகப்பெருமானே. (௩)

பசியால்வருந்துமேழைமுகம்
பார்த்தன்போடுபிடிசோறும்
பகர்ந்துமறியானின்சொல்லும்
பகர்ந்துமில்லான்வசைமொழியே

யிசையாதொழியானைப்போல
வெழுவான்விழுவான்கொடுமையெலா
மிழைப்பான்பிழைப்பானெவனவன்றன்
யானேயெனினுமேன்றுகொளாய்

சசிமான்கழுத்திற்பொற்றாலி
தயங்கவழங்குமருட்சேயே
சதிசெயவுணப்பெருங்காட்டைத்
தகிக்கவெழுந்தகொழுந்தீயே

கசியுமனத்துத்திருத்தொண்டர்
களிக்கவளிக்குநற்றாயே
கமலமலருந்தடஞ்சூழும்
கம்பைமுருகப்பெருமானே. (௪)

பொதியாசலத்துக்குறுமுனிக்கும்
புகழ்பாடருணகிரிகவிக்கும்
பொய்யாமொழிக்குநக்கீரப்
புலவன்றனக்குமனமிதங்கி

## பெருங்கழிநெடில்விருத்தம்.

யெதிராயடைந்துகாட்சியளித்
திளகியவர்சொலின்றமிழுக்
கின்பங்கொடுத்தவள்ளானீ
யெளியேன்றமிழுமேன்றுகொளாய்
சதிராயிலக்கர்நவவீரர்
தாராகணமாய்த்தற்சூழத்
தயையாரமுதுபொர்ழியுநிலை
சாயாத்தேயாத்தண்மதியே
சதிராயிரஞ்சூழிரவிகருங்கடலின்
முகட்டினெழுவதுபோற்
கலபமயிலின்வருஞ்சுடரே
கம்பைமுருகப்பெருமானே.

மாதராசைபொன்னாசை
மண்ணினாசையெனமூன்றாய்
வரும்பேராசைக்கடன்மூழ்கி
மாழ்கிவருந்தவெனைவிடுத்துப்
பாதரசமாயலையுமென்றன்
பாழாமனத்தைநிலைநிறுத்தும்
பான்மையரிதோநின்கமல
பதத்துட்பரிசம்போதாதோ
நாதமுடியினடம்புரியு
நங்கைபயந்தவிலஞ்சியமே
ஞானயோகர்கல்லுணர்வா
னாடிக்கலர்தவருள்வடிவே

காதும்பவமாங்கடுங்காட்டைக்
களைந்துநீறுசெயுநெருப்பே
கனகப்பொருப்பேபெயன்விருப்பே
கம்பைமுருகப்பெருமானே. (சு)

முன்னாரடைந்தமெய்யடியார்
மூன்றுமலமுங்கழிஇயுனது
முளரித்திருத்தாணிழலினவர்
முயங்கவிருத்துஞ்செயலேபோற்
பின்னாரடைந்தவெளியேற்கும்
பெரிதுன்மலர்த்தாடரல்வேண்டும்
பெற்றுட்கிளையசெய்மீதே
பிரியமிகவுண்டெனல்பொய்யோ
சின்னமதியும்படவரவுஞ்
திளைக்கும்வேணித்திருத்தாதை
செவியின்வேதச்சிரப்பொருளைத்
தெரிக்குஞானசற்குருவே
கன்னமதத்தவைந்துகரக்
களிற்றுக்கிளையகோளரியே
கண்ணேகண்ணிற்கருமணியே
கம்பைமுருகப்பெருமானே. (எ)

வெய்யபிறவிதனைவேண்டேம்
வேண்டேமென்னுமவர்போலும்
விருப்பமுடையேன்வினைவயத்தான்
மீண்டும்பிறவியுளதாமேல்

வையமதனினினைத்தமிழால்
வாழ்த்திவணங்கும்பேறுபெறு
மனிதப்பிறப்பேவேண்டுமிது
வருமோவினைதுகுறிப்பறியேன்
துய்யநெறியேதூமணியே
சோதிமலையேசுடரொளியே
சுரர்க்குமரியகற்பகமே
சுகந்தமலரேசெழுந்தேனே
கையிற்கிடைத்ததிருவமுதே
கருத்துக்கினியமுக்கனியே
கட்டிக்கரும்பேகற்கண்டே
கம்பைமுருகப்பெருமாளே. (அ)

பதியும்பசுவும்பாசமுமாம்
பதார்த்தமூன்றிற்பதியாகும்
பரனீபசுவாமெனைப்பாச
பந்தமறுப்பாயுலகினிடை
வதியுமிருளைச்சூரியனே
வந்துகெடுப்பானதுபோல
வள்ளாலுனக்கேகடமையிதே
மைந்தனெளியேன்வகுப்பதென்னே
விதியும்பதியுநீயேநன்
னிலமும்பயிருநீயேசொன்
னிறையும்பொறையுநீயேமெய்ந்
நெறியுங்குறியுநீயேமேற்

கதியுங்களிப்புநீயேயென்
கருத்துமுணர்வுநீயேநீர்க்
கடலுங்கலமுஞ்சூழ்ந்தோங்கும்
கம்பைமுருகப்பெருமானே. (கூ)

சைவத்திருவாளர்கள்போற்றத்
தவத்தோர்பல்லாண்டெடுத்தோதத்
தனிவேல்சேவல்விளங்கவரிச்
சயிலமனையமயின்மீது

தெய்வப்பிடியுங்குறக்கொடியுஞ்
செறியுங்கனகமலைபோலத்
திகழுநினதுதரிசனமே
சிறியேன்காணத்தயைகூர்வா

யுய்வைத்தருமெனுத்தமனே
யும்பர்பதியேயருணிதியே
யுயிருக்குயிரேயுணர்வோரல்
லுணர்வுக்குணர்வேசுகவொளியே

கைவைத்திடமாமலகமெனக்
காட்சியளிக்குஞ்சண்முகனே
காஞ்சிக்குமரகோட்டமெனுங்
கம்பைமுருகப்பெருமானே. (சo)

பெருங்கழிநெடில் விருத்தம் முற்றிற்று.

# அடைக்கலப்பத்து.

கஞ்சமலர்வாவிவளைகம்பைநகர்முருகோனே
வஞ்சவினையென்னுமொருவன்பேயாண்மனநடுங்கிச்
சஞ்சலமேபெரிதுடையேன்றளர்கின்றேனென்புரிவே
னஞ்சலெனவந்தருளாயடியேனுன்னடைக்கலமே. (க)

கற்பகநாட்டமரர்தொழுங்கம்பைவளர்சண்முகனே
நற்பணியுஞ்செய்தறியான்ஞானநெறிநாடகிலான்
மற்பகலும்வாணாளைப்பாழ்நாளாப்பண்ணுமிவ
னறபமெனத்தள்ளிவிடேலடியேனுன்னடைக்கலமே. ()

இன்னதிதென்றறியாமேயிடர்படுமிவ்வேழையினேன்
முன்னாவாவிதியிலேயேன்முருகாவோர்விண்ணப்ப [வாய்
மென்னமாமெள்ளுக்குளெண்ணெயைப்போல்வந்தமர்
மன்னவனேகம்பைவளர்வரதாவுன்னடைக்கலமே. (ஙு)

பார்க்கருளுங்கம்பையெனும்பதியுறையும்வேலவநின்
சீர்க்கருணைபெறவிரும்பிச்செய்தவங்கள்செய்துபவக்
கீர்க்கவழியறியாதுதீமையெலாம்புரிந்தபெரு [மே.
மூர்க்கனெனவெனைக்கைவிடேன்முருகாவுன்னடைக்கல

மகத்துவஞ்சேர்கம்பையெனுமாநகர்வாழ்காங்கெயனே
மிகத்துமுயர்பரத்துமுனையின்றியொருதுணையுமுண்டோ
மிகத்துயர்யான்படலாமோவிதுதகிவேந்தருளா
யகத்தியனுக்கருள்குருவேயடியேனுன்னடைக்கலமே. ()

காமாதிவென்றவர்சூழ்கம்பைவளர்சேவலனே
சீமானேமயிலேறுஞ்சேவகனேசிவகுருவே
தூமாரியில்பயிர்போற்றுவள்கின்றேன்சோதனைய
மாமாவந்தாதரிப்பாயடியேனுன்னடைக்கலமே. (சு)

ஒருமான்முன்முருகாவென்றோதுதலுங்கரமளித்த
பெருமானேகம்பைவளர்பிரணவமந்திரகுருவே
தருமானிலிளங்கன்றுத்தளர்கின்றேன்காத்தருளாய்
திருமானன்மருமானேசிறியேனுன்னடைக்கலமே. (எ)

பொய்யாகுமுலகினிடைப்போக்கறியேன்வரவறியேன்
செய்யாததீவினைகள்செய்தவனேயாகூறு
மெய்யாளர்க்கருள்புரியுமேன்மைபெறுங்கம்பைமுரு
கையாவந்தாண்டுகொளாயடியேனுன்னடைக்கலமே. ()

ஆறுமுகப்பெருமானேயாறிரண்டுதோளானே
நாறுகடம்பணிவோனேமங்கைவள்ளிநாயகனே
வீறுபுகழ்குஞ்சரியைவேட்டவனேவேண்டியவா
பேறுதருங்கம்பைவளர்பெருமானின்னடைக்கலமே. (கூ)

அன்னைமனமிரங்காளேலழுங்குழவிதனையெடுத்துட்
பின்னையெவராதரிப்பார்பெருமானீயறியாயோ
தன்னைநிகர்கம்பையுள்வாழ்சண்முகனேகண்ணருள்செய்
தென்னையுவந்தாண்டருளாயெளியேனுன்னடைக்கலமே.

அடைக்கலப்பத்து முற்றிற்று.

---

# போற்றிக்கலிவிருத்தம்.

பூமியெங்கும்புகழ்கம்பைவேள்பொன்னை
மாமியென்றுமகிழ்முருகன்சிவ
காமிதந்தருள்கண்மணியென்குரு
சாமிதண்ணருட்சண்முகம்போற்றியே. (௧)

வருமுகத்தமண்மங்கைதனக்கொரு
திருமுகத்திற்செழிக்குங்கம்பாபுரி
மருமுகந்தளிவாழ்சதுங்கடம்பன்மூ
விருமுகம்பொழியின்னருள்போற்றியே. (௨)

வாக்குமங்கைவளருங்கம்பாபுரி
மாக்குகேசன்மருவியவென்னையுங்
காக்குமன்பிற்கடைக்கணித்தன்பரி
ளுக்கும்டன்னிரண்டம்பகம்போற்றியே. (௩)

அன்பர்போற்றுமழகியகம்பையுட்
பொன்பருப்பதம்போலவமர்ந்தருண்
முன்பனூறுமுகன்றிருத்தொண்டருக்
கின்பநல்குமிளநகைபோற்றியே. (௪)

வளநிறைந்தமணிமதிற்கம்பைவாழ்
இளர்வைவேலன்கிளிமொழிவள்ளிமா
ணிளகப்புல்லியிருதனந்தோய்ந்தமெய்ப்
புளகப்பன்னிருபொற்புயம்போற்றியே. (௫)

நிலம்பராவுநெடுங்கம்பையென்னுமோர்
பொலம்பதிக்கண்புகழ்பெறவாழ்குகன்
வலம்புரிந்தன்பர்வாழ்த்துநன்மாமறைச்
சிலம்பணிந்ததிருவடிபோற்றியே. (௬)

சைவமார்க்கந்தழைத்தவண்கம்பையுட்
டெய்வயானையைச்சீர்மணங்கொண்டுறை
ஐயனென்னையடிமைகொண்டோன்றிருக்
கையமர்ந்தசதிரயில்போற்றியே. (௭)

இட்டம்வைத்தவரேத்துங்கம்பாபுரச்
சிட்டன்வேலவன்சீறடிவைத்தவு
மட்டதிக்குமனுகிரடித்துகல்
வட்டமிட்டுவருமயில்போற்றியே. (அ)

படியிலோங்கியசித்திரைப்பாவகா
ளடியர்வாழ்த்துமழகியகம்பையுண்
மிடியிலாதுமிளிர்விழவிற்குகன
கொடியிலுடியகுக்குடம்போற்றியே. (௯)

கல்விமல்கியகம்பையுளன்பர்கள்
வல்வினைக்கோமருந்தெனமன்னிய
நல்வினோதன்முருகேசன்ஞானாரியச்
செல்வக்கந்தன்றிருப்புகழ்போற்றியே. (௧0)

போற்றிக்கலிவிருத்த முற்றிற்று.